# ஸ்ரீமத் கம்பராமாயணம்

## பால காண்டம்

(திருவவதாரப் படலம் முடிய)

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்
தொகுத்துவைத்த குறிப்புரை முதலியவற்றுடன்

டாக்டர் ஐயரவர்களின் குமாரர்
S. கலியாணசுந்தர ஐயரால்
பதிப்பிக்கப் பெற்றது

Kambaramayanam Balaga
ndam.



Author :- Kambar


கலாக்ஷேத்திரம், அடையாறு

1946

கணபதி துணை

# முகவுரை

இராமபிரானுடைய சரித்திரத்தைக் கூறும் இராமாயணம் ஏழு காண்டங்களையுடையது. கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் தமிழ் மொழியில் விருத்தப்பாவில் முதல் ஆறு காண்டங்களை இயற்றியுள்ளார். இப்பகுதி கம்பராமாயண மென வழங்கும். இக்காவியம் எல்லோராலும் மிகவும் பாராட்டப் பெறும் நூலாகும். ஏழாவதாகிய உத்தர காண்டத்தை இயற்றியவர் வாணியன் தாதன் என்று கூறுவர்.

இவ்வேழு காண்டங்களையும் அச்சிட்டு வெளியிட வேண்டுமென்ற நோக்கத்துடன் பல வருஷங்களாக என் தந்தையாராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் உழைத்துவந்தார்கள். இதற்காக அவர்கள் தேடித் தொகுத்த ஏட்டுச் சுவடிகள் பல; கடிதப் பிரதிகளும் சில உண்டு. அவர்களுக்கு இருந்த பல வேலைகளால் அவர்கள் எண்ணியிருந்தபடி அவர்கள் கருத்து நிறைவேறவில்லை. அவர்கள் காலத்தில் வெளி வந்திருந்தால் மிகவும் செவ்விதான முறையில் பதிப்பு அமைந்திருக்குமென்பதை யான் எடுத்துக் கூறுவது மிகையாகும்.

அவர்கள் 1942இல் காலஞ் சென்ற பிறகு 1943 ஜூலை மீ 5 ஆந் தேதி அடையாற்றில் அவர்கள் பெயரால் ஒரு நூல் நிலையம் நிறுவப் பெற்றதும் அவர்கள் தொகுத்து வைத்திருந்த சொந்த ஏட்டுச் சுவடிகள் எல்லாம் அதில் வைக்கப் பெற்றதும் அன்பர்கள் அறிந்தனவே. அவற்றுள், நூல் நிலையத்தின் அத்யக்ஷகராகிய ஸ்ரீமதி ருக்மிணி தேவியாரவர்களுடைய நோக்கத்தின்படி **பரதசேனாபதீயம், நவநீதப் பாட்டியல், கும்பேசர் குறவஞ்சி, திருக்குற்றாலக் குறவஞ்சி** என்பன ஒன்றன் பின் ஒன்றாக வெளிவந்தன.

பல தமிழன்பர்கள் ஐயரவர்களுடைய குறிப்புக்களுடன் கம்பராமாயணப் பதிப்பு இந்நூல் நிலையத்தில் வெளிவந்தால் மிக்க

பயன்படு மென்று கூறவே 30-4-1944இல் கலாக்ஷேத்திரத்தில் இது விஷயமாக ஒரு சபை கூடியது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் உபதலைவரும் சிறந்த தமிழபிமானியும் மதுரையிற் பிரபல வழக்கறிஞருமாகிய ஸ்ரீமான் டி. ஸி. ஸ்ரீநிவாச ஐயங்காரவர்கள், ராவ்பகதூர் கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள், சென்னை அரசாங்கக் கல்லூரித் தமிழாசிரியர் ஸ்ரீமான் ஆர். விசுவநாதையரவர்கள் முதலியவர்களை உறுப்பினராகக் கொண்ட ஒரு கழகம் அமைக்கப் பெற்றது. தமிழ் நூல்களில் சிறந்த பயிற்சியுள்ளவரும் ஐயரவர்களுடன் பல வருடங்களிருந்து நூற்பதிப்பு விஷயத்தில் அனுபவம் பெற்றுள்ளவருமாகிய ஸ்ரீமான் ச. கு. கணபதி ஐயரவர்கள் இராமாயணத்தைப் பதிப்பிக்கும் விஷயத்தில் பொறுப்பாளியாக நியமிக்கப் பெற்றார்கள். அது முதல் அவர்கள் பதிப்பு வேலையை ஊக்கத்துடன் கவனித்து வருகிறார்கள்.

இப்பொழுது பாலகாண்டம் ஐயரவர்களின் குறிப்புரையுடன் அச்சாகி வருகிறது. அயோத்தியாகாண்டத்தின் பதிப்புவேலை நடந்து வருகிறது. நல்ல தாளில் பெரிய அளவில் சித்திரப் படங்களுடன் இராமாயணத்தை எட்டுப் புத்தகங்களாக வெளியிட ஏற்பாடாகி வருகிறது. பதிப்பின் விசேஷமான கூறுகளை விளக்குவதற்கு மாதிரியாக முன் கூட்டி ஐயரவர்களின் தினத்தை யொட்டிப் பாலகாண்டத்தின் திருவவதாரப்படலம் முடிய உள்ள பகுதி இப்பொழுது வெளிவருகிறது.

இப்பதிப்பின் சில விசேடங்களாவன :

முதலில் சிறந்த மூல பாடமும், அதனையடுத்து அரும்பதவுரை, அந்த உரைக்கேற்ற பிரயோகம், விசேடக் குறிப்பு, இராமாயணத்திலும் வேறு நூல்களிலும் காணப்படும் ஒப்புமைப் பகுதிகள், கம்பர் வான்மீகத்தின் கருத்துக்கு வேறுபட்டுள்ள விஷயம் முதலியனவும், ஈற்றில் பிரதிபேதங்களும் காட்டப் பெற்றுள்ளன. விட்டுப் போன பாடல்களும் அதிகப் பாடல்களும் உரிய இடங்களில் அமைந்துள்ளன. பாடல்களுக்குக் கருத்து எளிதில் புலப்படுமாறு தலைப்புக்கள் எழுதப் பெற்றுள்ளன.

கம்பராமாயணத்துள் பிரதிக்குப் பிரதி படலங்களின் பெயரும் ஒரு காண்டத்தைச் சேர்ந்த படலங்களின் எண்ணும் வேறுபடுகின்றன. இந்தமாதிரிப் புத்தகத்துள் திருவவதாரப் படலமாகிய ஒன்று

சில ஓலைச் சுவடிகளில் மூன்றாக உள்ளன. அவையாவன : செய்யுள் 194 முதல் 223 முடிய, திருவாக்குரைத்த படலம்; செய்யுள் 224 முதல் 273 முடிய, கலைகோட்டுமுனி படலம்; 273க்குப் பின் 'எனக்கலை மாமுக' என்ற அதிகப்பாடல் முதல் 327 முடியத் திருவவதாரப் படலம் என்பனவாகும்.

கம்பராமாணத்துக்கு இராமாயணக் கருப்பொருள் என்று பழைய அரும்பதவுரை ஒன்று உண்டு. இதன் சில பிரதிகள் நூல் நிலையத்தில் உள்ளன. இவற்றைப்பற்றி ஐயரவர்கள் குறித்துள்ளவற்றுள் ஒரு பகுதி வருமாறு :

'பரம்பரையாகக் கேட்டு வந்தவர் பாடம் சொல்லியபோது ஒருவர் குறித்ததாகத் தெரிதலால் இது நூலின் பெருமையைக் காட்டக் கூடிய சிறந்த உரையன்றெனத் தோற்றியும், பழைய கருத்து விளங்க வேண்டுமென்றே யிதனை வெளிப் படுத்தலானேன்...... சிறந்த தமிழ்ப் பண்டிதர்கள் இருந்த ஊரிலிருந்தவருடைய கருத்தாகத் தெரிந்தமையின் இது தழுவுதற்குத் தக்கதாயிற்று...... இவ்வுரைக்கு ஏற்ற பாடங்கள் *பழைய கையெழுத்துப் பிரதிகளிற் காணப் படுகின்றன...... என்னுடைய சொந்தக் கருத்து இதில் ஒன்றுமில்லை.'

கம்பராமாயணக் கருப் பொருளிற் கண்ட உரை [ ] இந்தக் குறிகளுக்கிடையில் காட்டப் பெற்றுள்ளது. இந்த உரையன்றிப் பொழிப்புரையாகக் கூறிச் செல்லும் ஒரு சுவடியுமுண்டு. அதில் உள்ள உரை இப்புத்தகத்துள் 'ஓர் உரை' என்ற தொடரால் புலப்படுத்தப் பெற்றுள்ளது.

ஐயரவர்கள் பாடபேதங்களைக் குறித்து வருகையில் சிலவற்றின் எதிரில், 'நல்லபாடம்' என்ற தொடரை எழுதியுள்ளார்கள். சிறந்த பாடத்தை நிச்சயிக்க இது பெரிதும் உதவியது.

சில செய்யுட்களுக்கு இதுகாறும் தெரிந்திராத உரை ஐயரவர்களின் குறிப்புரையால் தெரியவருகிறது : 14, 29, 33, 52, 59, 65, 69, 93, 126, 158, 160, 177, 226, 276, 285, 323 இலக்கமிட்ட பாடல்களை நோக்குக.

* இவை ஐயரவர்கள் தொகுத்துவைத்துள்ளவை.

இப்பதிப்புக்குத் துணையாக ஐயரவர்கள் சேர்த்து வைத்துள்ள நூல்கள் முதலியவற்றின் விவரம் :

இந்நூல் நிலைய ஓலைச் சுவடிகள் 7, வேறு சுவடிகள் 5

இராமாயணக் கருப்பொருள் சுவடிகள் 2

ஒவ்வொரு காண்டத்துக்கும் உள்ள கடிதப் பிரதிகள் 2

கருப்பொருள் கடிதப் பிரதி 2

வசனமாக உள்ள சுவடிகள் 2

பழங்காலந் தொட்டு அவ்வப்போது வெளிவந்த அச்சுப் பிரதிகள் சில.

அவ்வப்பொழுது வெளிவந்த கட்டுரைகளும் உபந்நியாசங்களும் பல.

இராம கதையைக் கூறும் வேறு காவியங்களும், நூல்களும் சில.

ஐயரவர்கள் தம் கைப்பட எழுதிவைத்த குறிப்புரை, பாடபேதங்கள், வரலாறுகள், ஆராய்ச்சி, ஒப்புமைப் பகுதிகள் முதலியவை அடங்கிய புத்தகக் கட்டுக்கள் சில.

இப்பதிப்பில் பாலகாண்டத்தின் செய்யுளெண்கள் தொடர்ச்சியாகக் காட்டப் பெற்றுள்ளன. ஒப்புமைப் பகுதியை வேறு காண்டங்களிலிருந்து காட்டியுள்ள இடங்களில் முதலில் காண்டத்தின் எண்ணும் அதனை யடுத்துப் படல எண்ணும் இறுதியில் செய்யுளெண்ணும் உள்ளன.

இந்நூற் பதிப்பு விஷயமாக அவ்வப்போது வேண்டிய ஆலோசனைகளைக் கூறி உதவியவர் சென்னைக் கிறிஸ்தவக் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் ஸ்ரீமான் வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்கள் பி. ஓ. எல்., ஆவர். அவர்களுக்கு என்நன்றி உரியதாகும்.

அடையாறு,
28 - 4 - 1946.

இங்ஙனம்
எஸ். கலியாணசுந்தரம்

## இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப் பகராதி

அகநா—அகநானூறு
அடியார்—அடியார்க்கு நல்லாருரை
அதிகப்—கம்பராமாயணம் அதிகப்பாடல்
அரங்கத்—திருவரங்கத் தந்தாதி
ஆசாரக்—ஆசாரக் கோவை
இ. கொ—இலக்கணக் கொத்து
இராசராச—இராசராச சோழனுலா
கந்த—கந்தபுராணம்
கந்தரலங்—கந்தரலங்காரம்
கல்—கல்லாடம்
கலி—கலித்தொகை
கலிங்கத்—கலிங்கத்துப்பரணி
கும். குற.—கும்பேசர் குறவஞ்சி
குலோத்—குலோத்துங்க சோழனுலா
குலோத். பிள்ளை—குலோத்துங்கசோழன் பிள்ளைத் தமிழ்
குற்றாலப்—திருக்குற்றாலப் புராணம்
குறள்—திருக்குறள்
குறிஞ்சி—குறிஞ்சிப் பாட்டு
குறுந்—குறுந்தொகை
கூர்ம—கூர்ம புராணம்
சிதம்பரச்செய்—சிதம்பரச் செய்யுட்கோவை
சிலப்—சிலப்பதிகாரம்
சீவக—சீவக சிந்தாமணி
சிற்—திருச்சிற்றம்பலக் கோவையார்
சிறுபஞ்ச—சிறுபஞ்சமூலம்
சிறுபாண்—சிறுபாணாற்றுப்படை
சூ—சூத்திரம்
சூளா—சூளாமணி
சேதுபு—சேதுபுராணம்
தக்க—தக்க யாகப் பரணி
தஞ்சை—தஞ்சைவாணன் கோவை
தமிழ்நா—தமிழ்நாவலர் சரிதை
தனிப்—தனிப்பாடற் றிரட்டு
திணைமாலை நூற்—திணைமாலை நூற்றைம்பது
திணைமொழி யைம்—திணைமொழி யைம்பது
திருஞா—திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்
திருவரங்கக்—திருவரங்கக் கலம்பகம்

திருவாச—திருவாசகம்
திருவாய்—திருவாய் மொழி
திருவால—திருவாலவாயுடையார் ,திருவிளையாடற் புராணம்
திருவிளை—திருவிளையாடற் புராணம்
திவ்—திவ்யப் பிரபந்தம்
தே—தேவாரம்
தொல்—தொல்காப்பியம்
நள—நளவெண்பா
நற்—நற்றிணை
நா—திருநாவுக்கரசு நாயனார்
நாலடி—நாலடியார்
நாற்கவி—நாற்கவிராஜ நம்பி அகப்பொருள்
நான்மணி—நான் மணிக் கடிகை
நெடுநல்—நெடுநல் வாடை
நைடத—நைடதம்
பட்டினப்—பட்டினப் பாலை
பதிற்—பதிற்றுப் பற்று
பரி—பரிபாடல், பரிமேலழகர்
பரிமேல்—பரிமேலழகர்
பழ—பழமொழி நானூறு
பாக—பாகவதம்
பி-ம்—பிரதி பேதம்
பிரபந்தத்—பிரபந்தத் திரட்டு
பிரபு—பிரபுலிங்க லீலை
பு-வெ—புறப்பொருள் வெண்பா மாலை
புறத்—புறத்திரட்டு
புறநா—புறநானூறு
பெரிய—பெரிய புராணம்
பெரியாழ்-திரு—பெரியாழ்வார் திருமொழி
பெருங்—பெருங்கதை
பெரும்பாண்—பெரும்பாணாற்றுப் படை
பேர்—பேராசிரியர்
பொருந—பொருநராற்றுப் படை
மணி—மணிமேகலை
மதுரைக்—மதுரைக்காஞ்சி
மலைபடு—மலைபடு கடாம்
முருகு—திருமுருகாற்றுப்படை
மேருமந்தர—மேருமந்தர புராணம்
மேற்—மேற்கோள்
யசோதர—யசோதரகாவியம்
யா, கா—யாப்பருங்கலக் காரிகை
யா. வி—யாப்பருங்கல விருத்தி
விக்—விக்கிரம சோழனுலா
வி-பா—வில்லி புத்தூரார் பாரதம்

ஸ்ரீ ராமஜயம்

# ஸ்ரீமத் கம்ப ராமாயணம்

## தனியன்கள்

கம்பரையும் அவரது இராமாயணத்தையும் புகழ்ந்து கூறும் தனிக்கவிகள் இங்கே தனியன்கள் என்ற தலைப்பின்கீழ்க் கொடுக்கப் பெற்றுள்ளன. பல புலவர்கள் பாடிய இவை ஒரு வகையில் சிறப்புப் பாயிரத்துள் அடங்கும். ஏனைச்சிறப்புப் பாயிரங்கள் போலல்லாமல் இங்கே ஆசிரியருக்கு வணக்கம் முதலியன கூறப்பட்டுள்ளன.

### கம்பர் கவிச்சிறப்பு

#### வெண்பா

(க) தாரதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மராமாயிற் றன்றே—இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

தாரதலம் - பூமியாகிய இடம். அம்புநாட்டு ஆழ்வான் - இராமர்; ஆள்வான் என்பது எதுகை நோக்கி ஆழ்வான் என்றாயிற்று. ஆதித்தன் கம்பன் - ஆதித்தன் என்றவருடைய மகனாகிய கம்பன்; 'ஆதவன் புதல்வன் . . . . . . மாதவன் கம்பன்' (தனியன், 5); ஆதித்தனை ஒரு சோழனென்று கொண்டு, தம் காலத்தவனான அவன் பெயரோடு கம்பருடைய பெயரும் இணைந்து வந்ததாகப் பொருள் கூறுவாருமுண்டு; இந்த ஆதித்தன் என்பவன் சோழன் விஜயாலயன் மகன்; 'எண்ணிய சகாத்தம்', (தனியன், 8) என்ற செய்யுளிற் கூறப்படும் காலமும் ஆதித்தன் காலமும் ஒன்றென்பர். இங்ஙனம்

பொருள் கூறுவார், வரலாற்றும் படலத்துள் கம்பர் 'ஆதித்தன் குல முதல்வன் மனுவினை' (725) என்று குறிப்பது இவனையே என்பர். கம்பர் ஆதித்தன் காலத்துக்கு மிகவும் பிற்பட்டவர் என்பது பலர்கருத்து. கம்பநாடு: ஓரிடம்; தனியன் 2, 4, 6-9. பெரியோர் பிறந்த இடத்தை நாடு என்றல் மரபு; 'காழிநாடன்' (தே. திருஞா. திருக்கேதீச்சுரம்); (ஒழிவிலோடுக்கம்); 'குடந்தைநாட்டில்' (தும். தூ.)

'கவி அரம் ஆயிற்று' என்று முடிக்க. கம்பர் கவியின் பெருமை: தனியன், 9.

கம்பர் துதி

கட்டளைக் கலித்துறை

(உ) வாழ்வார் [1]தரு வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்
தாழ்வா ருயரப் புலவோ ரகவிரு டானகலப் [துப்பெறத்
போழ்வார் கதிரி னுதித்ததெய் வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார் பதத்தைச்சிந் திப்பவர்க் கியாதும் அரியதன்றே.

ஆர்தரு - நிறைந்த. வெண்ணெய் நல்லூர் - ஒரு கிராமம்; இது வேறு; தேவாரப்பாடல் பெற்றதும் விழுப்புரம் பக்கத்திலுள்ளதுமான திருவெண்ணெய் நல்லூர் வேறு. சடையப்பன்: இவர் கரிகாற்சோழனால் தாபிக்கப்பெற்ற அறுபத்து நான்கு கோத்திர வேளாளருள் ஒரு கோத்திரத் தலைவர். நயினார் என்று வழங்கப்பெறுவர் (காணியாளரகவல்); தம் இராமாயணத்துள் கம்பர் சடையப்பருக்கு நிலையான இடம் அமைத்தமையின், 'வாழ்த்துப்பெற' என்றார்; பாயிரம் 14. தாழ்வார் - நாலாம் வருணத்தவர்; வேளாளரென்றபடி; 'ஆழ்வார் முன் பின்னவர்க்கும்' (திருவரங்கக்.) கம்பர் தாம்பாடியுள்ள ஏரெழுபதில் வேளாளரைப் பாராட்டி யிருப்பதைக் கொண்டும் வேளாளரகத்தில் வளர்ந்தமைகொண்டும் 'தாழ்வாருயர' என்றார். போழ்வார் கதிர் - சூரியன்; போழ் - இருளைப்பிளக்கின்ற; 'வாள் போழ் விசும்பு' (முருகு. 8); 'வாள்போழ் வானத்து வயங்குகதிர்' (நாற்கவி. சூ. 147, உரை); 'விண்ணம் போழும் வாள்' (பாக. க. 8: 13). தெய்வப்புலமை என்ற அடைமொழி திருவள்ளுவருக்கும் உண்டு.

(பிரதிபேதம்) [1] 'திருவெண்ணெய்'.

விருத்தம்

(ங) அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால் யோக ராலுயர்

*இம்பராம் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்*
*கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.*

அம்பு அரா - கங்கையையும் பாம்பையும். அரன் - உருத்திரன். இராம வேழம்; 'இருகை வேழத்திராகவன்' (பாயிரம், 1௩) வேழம் சேர் கம்ப ரென்றது ஒரு நயம்; கம்பர் - யானைகட்டும் கம்பம் போன்றவர்.

(௪) *சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்*
*கொம்ப னுடன் கொழுந னிராமப்பேர்*
*பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த*
*கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.*

சம்பு அந்நாள்; சம்பு—சிவபெருமான். சம்பு உமைக்குச்சொல்லியது இராமநாமம். பூங்கொம்பு அன்னாள் - சீதை. பம்ப - பரவ. நாள் தழைக்கும் - நீண்டகாலம் சிறந்தோங்கும்; 'சிலைபயி லிராமன் காதைச் செந்தமிழ் சிறந்து வாழ்க' (அதிகப்.) விருத்தத்தைப் 'பா' என்றார்; தனியன், 7; பாயிரம், 10, 13.

## வேறு

(௫) *ஆதவன் புதல்வன் முத்தி யமலனை யளிக்கு மையன்*
*போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேற்*
*கோதவஞ் சற்று மில்லாக் கொண்டன்மா றன்னை யொப்பான்*
*மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்.*

ஆதவன் - சூரியன்; ஆதவன் புதல்வன் கம்பன்: 'ஆதித்தன் கம்ப நாட்டாழ்வான்' (தனியன் 1.) அமலனை அளிக்கும் ஐயன் - இராமபிரானைத் தமிழுலகுக்குக் கொடுத்தருளிய தலைவன். இராமகாதை - இராமாயணம்; தனியன் 8. கோது அவம்; கோது—குற்றம். கொண்டல்மால் தன்னை - மேகம்போன்ற திருமாலை; கொண்டல்—மேகம். கம்பருக்குத் திருமால்: தனியன், 7.

## வான்மீகியும் கம்பரும்

(௬) *நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற*
*ஆரணக் கவிதை செய்தா னறிந்தவான் மீகி யென்பான்*
*சீரணி சோழ நாட்டுத் [1]திருவழுந் தூரு வச்சன்*
*[2]காரணக் கோடையான் கம்பன் தமிழினாற் கவிசெய் தானே.*

நாரணன் விளையாட்டு - இராமாயணம். இராமகதையை முதன் முதல் ஒரு நூலாகச் செய்தவர் வான்மீகி.

ஆரணக்கவிதை : * [வேதத்தின் உட்பொருளாகிய காயத்திரியின் எழுத்து இருபத்துநாலுக்கும் இருபத்துநாலு கிரந்தமாகச் செய்தமையால் 'ஆரணக்கவிதை செய்தான்' என்றார்.] வேதத்தில் மாத்திரம் வழங்கி வந்த சந்தத்தைக்கொண்டு முதலில் வான்மீகி செய்தமையால் இங்ஙனம் கூறினர். வான்மீகி : 8, 9, 13, 46, 107 ; கூ. 18 : 24 ; எ. பாயிரம், 5.

திருவழுந்தூருவச்சன் - திருவழுந்தூரிற்பிறந்த உவச்சன் ; உவச்சன் - பூசாரி ; 'கம்பன் பிறந்தவூர் காவேரி தங்குமூர், கும்பமுனி சாபங் குலைந்தவூர் - செம்பதுமத், தாதகத்து நான்முகனுந் தாதையுந்தே டிக்காணு, வேதவித்து வாழுமழுந் தூர்' (தமிழ்நா 185.) கம்பர் உவச்சரென்பது 'கைம்மணிச் சீரன்றிச் சீரறியாக் கம்பநாடன்' (தமிழ்நா. 102.) காரணக் கொடை - கம்பருடைய கோத்திரம் ; காணியாளரகவல்.

(பி - ம்) [1] 'திருவழுந் தூருள் வாழ்வோன்'.
[2] 'காரணி கொடையான்'.

திருமாலும் கம்பரும்

(எ) அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத [1]மீந்த
தம்பிர னென்னத் தானும் தமிழிலே [2]தாலை நாட்டிக்
கம்பநா டுடைய [3]வள்ளல் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே [4]நரருக்கின் றமுத மீந்தான்.

அம்பு - பாற்கடல். சிலை - மந்தரமலை. 'அம்பிலே வில்லலைவைத்து' என்பது நயம் ; அமரர் - தேவர் ; அமுதம் உண்ட பின்னர் அமரராயினமையின் இங்கே இடுகுறியளவாக நின்றது ; அமரர் - மரணமற்றவர். தம்பிரான் - தலைவன். தமிழிலே - தமிழாகிய கடலிலே. தாலை - நாவை. கவிச்சக்கரவர்த்தி : பண்டைக்காலத்தில் சயங்கொண்டாருக்கும் ஒட்டக்கூத்தருக்கும் இப்பட்டம் வழங்கி வந்தது. நம்பு - விருப்பம் ; 'நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல். உரி. கூ.) ஈந்தான் என்பதற்கேற்ப வள்ளல் என்றார். 'மறைப் பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து' (திருவரங்கக் - தனி. 3)

* இந்நூலுள் பகரக்குறிகளுள் அமைந்த உரைப்பகுதி கம்ப ராமாயணக் கருப்பொருள் என்ற சுவடியிற் கண்டது.

என்பதனை இச்செய்யுளோடு ஒப்பு நோக்குக. கம்பருக்குத் திருமால்; தனியன், 5.

(பி - ம்) [1] 'மீய்ந்த'. [2] 'தன்னை நாட்டி'. [3] 'கோமான்'. [4] 'நரர்க்கு மின் றமிர்த மீய்ந்தான், நரர்க்கு மின் னமுத மீந்தான்'.

இடங் கூறல்

(அ) எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன்
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன் [வாழ்வு
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே.

சகாத்தம் எண்ணூற்றேழின்மேல் பண்ணப்பெற்றது இக்கதை; சகாத்தம் - சாலிவாகனசகம்; கி. பி. 885 தனியன். 1, குறிப்புரை; கம்பர் காலம் பிற்பட்டதென்று கூறுவாருமுண்டு.

வெண்ணெய் நல்லூர் . . . . . இராமகாதை: 'வெண்ணெய் நல்லூர்வயிற் றந்ததே' (பாயிரம், 14.) [வெண்ணெய் நல்லூரிலுள்ள சடையன், சராமன், கண்ணனென்னும் மூவரும் பாடுவித்தது இராமகாதை]; இம் மூவரும் உடன்பிறந்தார் என்பர்—'என்னுடைய தம்பி சராமனுக்கிளை யான்', 'வெண்ணெயே . . . . . சராமனூர்' (தமிழ் நா. 77, 86); 'வெண்ணெய் வாழ் கண்ணன்': (500.) பங்குனி யத்த நாளில்: அத்த நாள் - அஸ்தநட்சத்திரம்; சிலபிரதிகளில் பங்குனி யுத்தரத்தில் என்பது காணப்படுகிறது. 'உண்மை யேறுந் திருவரங்கத் தொருவன் சபையி லுத்தர நாள், வண்மை யேற வரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே' என்று சோழமண்டல சதகம் கூறும். கண்ணிய - மதிப்பு மிக்க. திருவரங்கத்துள் பெரிய கோயிலில் அரங்கேற்றப்பெற்றது இது.

(பி - ம்) [1] 'பங்குனியுத்தரத்திற்.'

கம்பர் கவியின்பம்

வேறு

(கூ) இம்பர் நாட்டிற் செல்வமெல்லா மெய்தி யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலும் [யிற்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சே ரிராமன் றிருக்கதை
கம்ப நாடன் [1] கவிதையிற்போற் கற்றோர்க் கிதயங் களியாதே.

இம்பர்நாடு - இவ்வுலகம். கதையில் - பலரால் எழுதப்பெற்ற கதை களுள். கவிதையிற்போல் - கவிதையில் களிப்புண்டாதல்போல; 'வழிபட் டோட வருள்பெற்று மாயன் கோல மலரடிக்கீழ், சுழிபட் டோடுஞ் சுடர்ச் சோதி வெள்ளத் தின்புற் றிருந்தாலும், இழிபட் டோடு முடலினிற்பி றந்துதன்சீ ரியான்கற்று, மொழிபட் டோடுங் கவியமுதம் நுகர்ச்சி யுறுமோ முழுதுமே' (திருவாய்மொழி, அ. 10 : 5) என்ற பாசுரத்தை இச் செய்யுள் ஒத்திருக்கின்றது.

(பி - ம்) [1] 'கவிதையைப்போற்'.

## கம்பர் கவித்துவ சக்தி

### வேறு

(௧௦) கழுந்த ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிகள் தொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த ஞாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனாராய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடிய தெழுநூறே.

கழுந்து - ஆயுதங்களிலே கைபிடிப்பதனால் தேய்ந்து வழுவழுப்பாக உள்ள பாகம்; 'கழுந்தோடும் வரிசிலை' 251. 'உழுந்துடைக்கழுந்தில்' (குறுந். 384); 'விற்கழுந்து கொடுமாமுடியின் மோதுமுன்' 'ஆசுகங் கழுந்தாக' (வி. பா. அருச்சனன்றவ. 106, பதினெலாம்போர். 30.) கழுந்தர் - தேய்ந்த அறிவினர்; அறிவற்றவர் என்றபடி. உன - உன்னுடைய. வாளிகள் - அம்புகள்; சிலைராகவ - கோதண்டராம; 'வாகை சூடிய சிலையி ராமன்' (பாயிரம், 16.) அபிநவகவி - புதுமையாகக் கவிபாடுகின்ற வன். கம்பர் அவ்வளவு விரைவாக ஒரு பொழுதில் எழுநூறு கவி பாடினரென்பது புகழ்ச்சியுரைபோற் றோன்றுகிறது. ஞாயிறது: அது, பகுதிப்பொருள், விகுதி. எழுந்தஞாயிறு விழுவதன் முன் - பகல் நேரத் தில் என்றபடி; பகல் நேரத்திலன்றிக் கம்பர் இரவிலும் கவிபாடின ரென்பது, 'ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே, வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே, நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணுக்கர், பிந்தாமற் பந்தம் பிடி' (தமிழ் நா. 96) என்ற பாவால் தெரிய வருகிறது.

இராமனை முன்னிலை யாக்கிக் கூறிய கவி இது.

## தொகைக் கவி

### வேறு

(கக) [1] கரைசெறி காண்ட மேழு கதைகளா யிரத்தெண் ணூறு
பரவுறு சமரம் பத்துப் [2] படலநூற் றிருபத் தெட்டே
[3] உரைசெயும் விருத்தம் பன்னீ ராயிரத் [4] தொருபத் தாறு
[5] வரமிகு கம்பன் சொன்ன வண்ணமும் [6] தொண்ணூற் றாறே.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. பிரதிதோறும் பாடம் வேறுபடுகின்றது. உத்தரகாண்டம்—வாணியன் தாதனால் இயற்றப்பட்டதை அறியாத ஒருவர் இப்பாடலைப் பாடியிருத்தல் வேண்டும்.

(பி - ம்) [1] 'கரைதெரி'. [2] 'படல நூற்றெண்பத்தொன்று'. [3] 'விரைசெறி விருத்தம் பன்னீராயிரத்தொண்ணூற்றாறு. [4] 'தொருநூற்றூரு'. [5] 'வரைசெறி கம்பன்'. [6] 'எண்பத்தேழே'.

தனியன்கள் முற்றும்.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# 1. பால காண்டம்

## பாயிரம்

இப்பகுதியுள் தெய்வவணக்கமும் அவையடக்கமும் நூற் பயனும் செயப்படுபொருளும் கூறப்பெறுகின்றன. இப்பாயிரத் துள் முதல் மூன்று கவிகள் நூலுக்குப் புறம்பாகப் பாடப்பெற்ற வை என்பர்.

## 1. கடவுள் வாழ்த்து

சடகோபர்

விருத்தம்

1. தருகை நீண்ட தயாதன் றன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
[1] திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

1. தருகைநீண்ட தயரதன்: க. 5: 74, 19: 59; ரு. 4: 21; ச. 5: 76. இருகை வேழம்: உ. 4: 177; ரு. 6: 27; 'இருகையானை' (திருவா. சத. 41.) திருகை வேலைத் தரை; திருகு - மாறுபாடு; 'திருகலை யுடைய விந்தச் செகத்துளோர்' (க. 5: 32); ஐ - அழகு; வேலை - கடல். 'திரிகை வேலை' என்ற பாடத்துக்கு, கடல் வட்டம் என்பது பொருள், திரிகை - வட்டம்; அன்றித் திரிதலையுடைய வேலையுமாம்; 'திமிதமிட்டுத் திரியுந் திரைக்கடல்' (சு. 7: 42.)

இக்கவி பல பிரதிகளிற் காணப்படவில்லை.

(பி - ம்,) [1] 'திரிகைவேலைத்' (அ)

அனுமான்

வேறு

2. அஞ்சிலே யொன்று பெற்ற னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக [1] வாருயிர் காக்க வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தா னவனம்மை [2] யளித்து வைப்பான்.

அஞ்சு - பஞ்சபூதங்கள். பெற்றவன் வாயு. தாவினது நீர். ஆருக - மார்க்கமாக; மார்க்கமாக அமைந்தது வான். 'அஞ்சிலே ஒன்று ஆருக' என்பது நயம். [ஆருயிர் : சாதியேக வசனம்; ஊர் வந்தது என்பதுபோல்.] அஞ்சிலே ஒன்று - பூமிதேவி. அயலார் - பகைவர். வைத்தது தீ.

(பி - ம்.) [1] 'ஆருயிர்க்காக', 'ஆரியர்க்காக'
[2] 'யளித்துவப்பான்', 'யளித்துக்காப்பான்' (உ)

கலைமகள்

3. [1] பொத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிண்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

பொத்தகம் - சுவடி; தொல். சொல். சூ. 449, சே; நன். 433, மயிலை. ஞானவித்தகம் - அறிவுச் செல்வம்; 'வித்தக நீறணிவார்' (திருஞா. தே.) சின்முத்திரையை ஞானவித்தகம் என்றார். விமலையை அமலைதன்னை - உடற்குற்றமும் மனமாசும் இல்லாதவளை; சாத்துவிக குணமாகிய வெண்மை நிறமாதல் பற்றி இங்ஙனம் கூறினர். மொய்த்த - நிரம்பிய. கொந்து: கொத்து என்பதன் விகாரம்; பூமாலைக்கு ஆகுபெயர். முகிழ் - தாமரை மொட்டு; கோங்கின் அரும்பும் ஆம். தவளம் - வெண்மை. மைத்தகு - அஞ்சனத்தினால் தகுதி பெற்று விளங்கும்.

ஒப்பு. "புத்தகமும் ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும், வைத்த கமண்டலமும் வன்னிகையும் - முத்து, வடங்கொண்ட பூண்முலையாள் வந்தென் மனத்தே, இடங்கொண்டாள் நீங்கிற் றிடர்" (பெருந்தொகை, 118); "குண்டிகை படிக மாலை, மிண்டிய வித்த கத்தோ, டண்டிய பொத்த கங்கைக், கொண்டவள் வாணி யாகும்" (பிரபந்தத். 6 : 37.)

இந்த முதல் மூன்று கவிகளும் பாலகாண்டத்துக்குப் புறம்பானவை என்பது சில பிரதிகளால் தெரியவருகிறது. (பி - ம்.) [1] 'புத்தகம்' (ஙு)

கடவுள் வணக்கம்

## வேறு

4. உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கே[1]சர ணங்களே.

உலகம் : மங்கலச்சொல் ; முருகு. 1, அடிக். தாம் - வேறு துணையின்றித் தாமே. உளவாக்கல் - படைத்தல் ; சூக்கும வடிவாய் இருந்தவற்றை ஸ்தூலமாக உண்டாக்குதல். விளையாட்டு - எளிதிற் செய்யும் காரியம் என்றபடி ; 'விளையாட்டினிது கந்தோய்', 'வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ' (சு. 1 : 51, 54) ; 'காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி' (திருவா. திருவெம். 12.) அவர் - பரப்பிரமம். சரணங்களே : வணக்கம் ; அருக சரணம், சித்த சரணம், சாது சரணம் என்பவற்றிற்போல ; 502 ; சு. 3 : 36 ; யு. 6 : 80 ; 'சரணமாகுந்தன தாளடைந் தார்க்கெலாம், மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்' (திருவாய். 9. 10 : 5.)

இதுமுதல் மூன்று கவிகள் பரவஸ்து வணக்கம் ; திருக்குறுங்குடிப் பிரதிகளில், 'இது முதல் மூன்று கவிகள் கடவுள் வணக்கம்' என்ற குறிப்பு உள்ளது.

(பி - ம்.) [1] 'சரணுங்களே' (ச)

5. [1] சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத லன்றரோ.

சிற்குணத்தர் - ஞானிகள் ; சித் - ஞானம் ; 'சிற்குணத்தின்' என்ற பாடத்துக்கு, 'ஆன்மஞானத்தினாலேயும்' என்று பொருள் கொள்க. தெரிவருநன்னிலை - அளவிடக் கூடாத பிரமத்தினுடைய மகத்துவத்தை. உணர்த்த அரிது. மூன்றனுள் - சாத்துவிகம், இராசதம், தாமதமென்று சொல்லப்பட்ட மூன்று குணங்களுக்குள்ளே. முதலோர் - எல்லாச் சராசரங் களுக்கும் முதலான தெய்வம். 'தெரிவருநன்னிலை எற்குணர்த்தரிது. அதனால் முதல்வராகிய சாத்விக குணத்தவரான ஸ்ரீராமபிரானது கல்யாண குணங்களைக் கூறித்திளைப்போமாக' என்றும் சொல்லலாம். குணக்கடல் : 111, 567 ; உ. 11 : 37, 12 : 131 ; யு. 2 : 60. சு. 16 : 22. எல்லா மதத்தவரும் தத்தம் கடவுளரையே முற்குணத்தவர் என்பர். 'அலகிலாத வானந்த குணக்கடல்' (யசோதர. காப்பு.)

[சிற்குணம் - ஆன்மஞானம். எற்கு - எனக்கு. உணர்த்தரிது - அறிவிக்க இயலாது. முக்குணங்களுள் முதற்குணமான சுத்த சாத்துவிகமான ஞானரூபத்தையுடையவரே யாவர்க்கும் முதலாகிய பரப்பிரமம். அவர் - அவருடைய. நற்குணக்கடல் - கிருபாசமுத்திரத்திலே. ஆடுதும் - முழுகுவோம்.

இவ்வாறன்றிச் சாத்துவிக குணம் அரியென்றும் அரனென்றும் பொருளுரைத்துப் பிணங்குவர். 'உலகம் யாவையும்' என்னும் திருவிருத்தம்

முதல் இம்மூன்று பாட்டானும் பொதுமையாற் பிரமத்தை வணங்கினன் கம்பன். இது மகா காவியமாகையால் இம்மூன்று பாட்டுக்கும் தனித் தனியே பொருள் விரிக்கிற் பெருகுமென வறிக. ]

(பி - ம்.) [1] 'சிற்குணத்தின்' (௫)

6. ஆதி யந்த [1] மரியென யாவையும்
ஓதி [2] னரல கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி [3] நோன்மையன்
பாத மல்லது பற்றிலர் பற்றிலார்.

வேதம் அலகில்லன: 'அநந்தாவைவேதா' (தக்க. 40, உரை.) உள்ளன - சத்தியமானவை. மெய்ந்நெறி நோன்மையன் - உலகத்துக்கெல்லாம் உண்மையான வழியைத் தருகிற பெருமையை யுடையவன்; ச. 12 : 37. மெய்ந்நெறி: 313; 'பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க நெறி' (குறள். 6.) பாதமே பற்று: ச. 12 : 37; பற்றிலார் - அகப்பற்று, புறப்பற்றுக்களைத் துறந்த ஞானிகள்; 'பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய், முற்றவா லுணர்வுமேன் முடுகினர்', 'முத்தியிற் போவது புரிபவர் மனமும் பொன்விலைப், பாவையர் மனமும்போற் பசையு மற்றதே' (354, 366.)

'மெய்ந்நெறி நோன்மையனுடைய பாதங்கள் ஆதியந்தம் அரியன; அரியன - இல்லாதவை. யாவையும் ஓதினர் அலகில்லன - சகல கலைகளையும் அறிந்தவர்களாலும் அளவிடக் கூடாதவை. வேதமென்பன உள்ளன - வேதங்களானவை சிரசின்மேலே உண்மையாக வைத்திருக்கப் பெற்றன. பற்றிலார் அல்லன பற்றிலர் - எப்பற்றுக்களையும் துறந்த ஞானிகள் இப் பாதங்களை அல்லாமல் பிறவற்றைப் பற்றமாட்டார்கள்' (ஓர் உரை.)

[ஆதியந்தம் அரியனவும் அலகில்லன வேதங்கள் உள்ளன என்பனவு மாகிய பாதம் எனக் கூட்டுக. 'வேதம் உள்ளன என்பன' என்று அந்வயம். மெய்ந்நெறி நோன்மையன் - உண்மை வழியான பெருமையுடையவன். பற்ற லர் பற்றிலார் - பற்றுரர்கள் விருப்பும் வெறுப்புமற்ற பெரியோர்கள். இவ் வாறன்றி 'ஆதி அந்தமும் அரியென யாவையும் ஓதியும் அலகில்லென உளவென வேதமென்பன' எனப் பாடங்கொண்டு ஆதியிலும் அந்தத்திலும் அரியென்று சொல்லியும் வேதங்கள் பரத்துவநிலை யறியாமல் மயங்குமென உரைப்பாருமுளர்.]

'அலகில்லன உள்ளன வேதமென்பன யாவையும் ஓதினர் பற்றிலார். ஆதியந்தம் அரியென மெய்ந்நெறியை அருளிச்செய்த நோன்மையனது பாத

மல்லது பற்றிலர்' என்று பொருள் கொள்ளலுமொன்று. நாமும் அத்தகைய பாதங்களைப் பற்றுவோம் என்பது கருத்து.

(பி-ம்.) [1] 'மரியன', 'மரீயென', [2] 'ஞரலகில்லன வுள்ளென', 'ஞரலதில்லென' [3] 'நன்மையன்' (சு)

## 2. அவையடக்கம்

7. ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

பூசை-பூனை; 559; ௬. 1: 25; பூசா: மலைநாட்டு வழக்கு. பாற்கட . . . . . புக்கென: 'முற்றப், பெருகு தெண்கடலுற்றுண் பெருநசை, ஒருசு ணங்கனை யொக்குந் தமியனேன்' (பெரிய. பாயிரம், 6.) ஆசை பற்றி அறையலுற்றேன்: 46; 'காதல் கிளரத் தமிழ் நூற்கலுற்றேன்' (சூளா. பாயிரம். 2.) காசு இல்-குற்றமில்லாத. கொற்றத்திராமன் கதை: இராமாயணம் முழுவதும் இராமனது வீரத்தையே கூறுவதாகும்; 'திறல் சேரிராமன் திருக்கதை', 'நாடியபொருள் கை கூடும் . . . . . . . தோள்வலி கூறுவோர்க்கே', 'இராமன் வென்றி கொண்டு . . . . துலைத்தனை வகுத்துப் . . . . . எய்துடனயோத்தி வந்தான்', 'வென்றிசே ரிலங்கையானை வென்றமால் வீரமோத', 'இலங்கை மூதூர்செற்றவன் விசையப்பாடல்' (தனியன், 8; பாயிரம், 15-6, 19, 23.) அரோ: அசை. (எ)

8. நொய்தி னொய்யசொன் னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த [1] செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

நூற்கலுற்றேன்: 'இராமன் கதைமேற் றமிழ்நூற்கலுற்றேன்' (உத்தர. கடவுள். 5;) 'தமிழ்நூற்கலுற்றேன்' (சூளா. பாயிரம்.) எனை=என்னை-என்ன பேதைமை! வைத வைவின் . . . . . எய்தவற்கு: சாபமொழி போன்றது அம்பு; 418, 559; ௬. 7: 182; ௪. 12: 35, ௬. 17: 116. வைதவைவின் . . . . . . மாக்கதை; வைவு-வான்மீகி முனிவரது சாபம்; முனிவர் ஒருநாள் நீராடச் செல்லுகையில் ஆணும்

பெண்ணுமாகக் கூடியிருந்த இரண்டு கிரவுஞ்சங்களில் ஆண்பறவையை வேடன் ஒருவன் அம்பாற் கொன்று வீழ்த்தப் பெண்பறவையின் துன்பத்தைக் காணச் சகியாத முனிவர் 'மாநிஷாத ப்ரதிஷ்டாம்த்வம்' என்று தொடங்கும் ச்லோகத்திஞல் அவனைச் சபித்தார்; அந்த ச்லோகத்தின் காரணமாக இராமாயணம் தோன்றியதென்பர். மாக்கதை: பாயிரம், 9, 14. செய்த செய்தவன்: தனியன், 5; 9, 13; 46, 107; சு. 18: 24. சொல்-கவி; 'தேவர் குறளும் . . . . . திருமூலர் சொல்லும்' (ஔவையார்) என்பது போல'. சொல்லுக்கே கௌரவம் உண்டென்றபடி. தேயம்-தமிழ்நாடு.

(பி-ம்.) [1] 'செய்தவர்' (அ)

9. வைய மென்னை யிகழவு மாசெனக்
செய்த வும்மிதி யம்புவதி யாதெனிற்
பொய்யில் கேள்விப் [1] புலமையி ஞேன்புகல்
தெய்வ [2] மாக்கதை மாட்சி தெரிக்கவே.

வையம்-அறிஞர்கள். 'உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே' பொய்யில் கேள்வி: 'உண்டபேதைமை மயக்கற வேறுபட்டுருவம் . . . . . நின்றனள்' (553); 'பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப்படர்ந்து' (கலி. கச: 14.) புலமையிஞேன்-வான்மீகி. புலமையிஞேர் என்ற பாடத்துக்கு இராமகதையை வடமொழியில் எழுதிய பல அறிஞர்கள் என்று பொருள் கொள்ளவேண்டும். தெய்வமாக்கதை-தெய்விகமான இராமாயணக்கதை; 'தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச்செய்தான்' (46.)

(பி-ம்.) [1] புலமையிஞேர்' [2] 'மாக்கவி' (க)

10. துறைய டுத்த [1] விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதின்யாழ்
நறைய டுத்த வசுணநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

துறை-சந்தபேதம்; அகமும் புறமும் ஆகியபொருட்கூறு எனினும் அமையும்; 'அவியகத்துறைகள் தாங்கி' (ந. 5: 1.) [உறையடுத்த செவி; உறை-இடம்.] அசுணமா: இது யாழ் முதலிய இன்னிசைக்கு மகிழ்ந்து பறை முதலிய கடிய ஓசைகளுக்கு வருந்தி மாழ்கும் என்பர்; இதனை நச்சிஞர்க்கினியர், 'இசை யறியும் விலங்கு' என்பர் (சீவக. 1402, ந.); அசுணம்: உ. 8: 24; நற். 304; நான்மணிக். 2; சூளா. நாட்டுச். 28; பெருங். க. 47: 241-2; வி. பா. காண்டவ. 20; கூர்ம. இராமன்

வனம்புகு. 6; மேருமந்தர. ஜயந்த. 44. பா - விருத்தம்; தனியன், 4; பாயிரம், 13.

(பி - ம்.) [1] 'விருத்தக் கவித்தொகை' (௧௦)

11. முத்த மிழ்த்துறை யின்முறை [1] போகிய
உத்த மக் [2] கவி ஞர்க்கொன் றுணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் [3] பெறுபவோ.

துறை - பொருட் கூறுகள். [முத்தமிழ் - இயலிசை நாடகம்.] முறை போகிய - நூல்களில் பயிற்சி மிக்க. பத்தர் சொன்னவும் - மூடபக்தியுடனே அடியார்கள் செய்த தோத்திரங்களும். பக்தியினாலே லட்சணம் தெரியாமல் பாடினாலும் குற்றம் பாராட்டாமல் பொறுத்து இரட்சிக்கவேண்டும் என்பது கருத்து.

(பி - ம்.) [1] 'நோக்கிய' [2] 'கவிகட்' [3] 'பெறுவரோ' (௧௧)

12. அறையு மாடரங் கும்[1]மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடத் தச்சருங் காய்வரோ
இறையுங் [2] கேள்வி யிலாதவென் புன்கவி
முறையி [3]னூ லுணர்ந் தோரு முனிவரோ.

ஆடரங்கு - நாடகசாலை. மடம் - அறியாமை. படப்பிள்ளைகள் (பி - ம்.) பட - உண்டாக. தறை = தரை. தச்சர் - சிற்பிகள். 'திங்களெனுந்தச்சன்' (641.) இறையும் - சிறிதும். புன்கவி: 'புன்கவியெனத் தெளிவின்றி' (120.)

'இவையாறும் (கவி. 7 - 12) அவையடக்கம்'. திருக்குறுங்குடிப்பிரதி.

(பி - ம்.) [1] 'படப்பிள்ளைகள்' [2] 'ஞானமிலாத' [3] 'னூலுணர்ந்தாரு' (௧௨)

## நூல் வழி

13. தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னாருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னாலி துணர்த்திய பண்பரோ.

தேவபாடை : வடமொழி ; 'பற்பலதேய வேந்தர் தொகுதலின் பாடைதேர்வான், அற்புடனெவருந்தேவ பாடையி னறைவர் மாதோ' (நைடத. சுயம், 7.) மூவர் : வான்மீகர் வஸிஷ்டர் போதாயனர் என்றும், வான்மீகர் வஸிஷ்டர் அகஸ்தியரென்றும், வான்மீகர் வியாஸர் போதாயன ரென்றும், வான்மீகர் பாஸர் காளிதாசர் என்றும், சியவனர் நாரதர் வான்மீகியென்றும் பலவாறாகக் கூறுவர் ; போதாயனர் செய்தது அத்யாத்ம ராமாயணம். நாவினூர் - வாக்கையுடையவர். நாலுபாதம் முதன் முதல் வகுத்தமையின் 'முந்திய நாவினூர்' என்றார். 'உணர்த்திய பண்பு . . . . . நாவினூருரையின்படி' என்று முடிக்க. (கங)

## இடம் கூறல்

14. நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தின்
இடைநி கழ்ந்த விராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே.

நடையில் நின்று ; நடை - நல்லொழுக்கம் ; 'இராமன் நடையையும் கிருஷ்ணன் மொழியையும் அறிக' என்பது பழமொழி. நாயகன் - திருமால். தோற்றம் - அவதாரம். [பரசுராமன் பலராமன் இவர்களுக் கிடையே அவதாரம் செய்த தசரதராமன்.]

இராமாவதாரம் : இராமாயணத்தின் பெயர் இது ; புறத்திரட்டில் இப்பெயரோடே இந்நூல் காணப்படுகிறது ; 'இராமன் கதை' என்றும் பெயருண்டு ; 22 ; இ. கோ. சூ. 7, உரை ; ஒரு சுவடியில் இராமன் கதை என்றே காணப்படுகிறது. தொடை - எதுகை முதலியன. தோம் - குற்றம். மாக்கதை - மகாகாவியம் ; 21 ; 'எடுக்கும் மாக்கதை' (பெரிய. பாயிரம்.) (கச)

## ஏக விருத்த ராமாயணம்

### வேறு

15. பாரவரு மிராமன் மாதோ டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கரனை மானைக் கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு துளைத்தனை வகுத்துப் பின்னர்
இராவணன் குலமும் பொன்ற வெய்துட னயோத்தி வந்தான்.

இக்கவியில் இராமாயணம் முழுவதும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இராமபிரானது தோள்வலிக்கேற்ற செயல்களே இதிற் கூறப்பெற்றுள்ளன; 7, குறிப். (கரு)

## 3. பயன்

### வேறு

16. நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
[1] வீடுயர் வழியு மாகும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை [2] நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

நாடிய - விரும்பும். பொருள் - கல்வியும் செல்வமும்; 'நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள் செய்வார்க்குமஃதிடம்' (சீவக. 77.)

'ஸ்ரீராம விஜயமாகிய இராமாயணக் கதையைப் பாராயணம் பண்ணுகிற பேருக்கு யாவரும் விரும்பப்பட்ட கல்விப்பொருளும் செல்வப்பொருளும் அனுகூலமாகும்; ஆகவே இம்மையிலே கல்விப்பொருளினால் ஞானமுண்டாகும்; செல்வப்பொருளினால் தானதர்ம உபகாரங்கள் செய்யப்பட்டுக் கீர்த்தியுண்டாகும்; அப்படி இம்மையில் உண்டான ஞானத்தினாலே மறுமையிலே மோட்சமடையும் வழியைக் காட்டும்; தானதர்ம உபகாரமான கீர்த்தி உண்டாகவே ஸ்ரீ மகாலட்சுமியாகிய பிராட்டியாருக்கு மனசு சந்தோஷமாய் மோட்சமடைவதற்கு ஏதுவான கிருபாநோக்கத்தைப் பிரசாதிப்பாள்' (ஓர் உரை.)

[இது தன்றொழிலும் பிறிதின்றொழிலும் மயங்கிய பாட்டு.] பல பிரதிகளில் இது நூலின் முதற்பாட்டாகக் காணப்படுகிறது.

(பி - ம்.) [1] 'வீடியல் வழியதாக்கும்', 'வீடுயர் வழியுமாக்கும்'
[2] 'நீறுபட்டொழிய' (கசு)

### வேறு

17. நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்.

நல்கும் - உண்டாக்கும். தின்மை - தீமை. இரண்டெழுத்தினால் - இரண்டெழுத்தையும் உச்சரிப்பதனால் என்று பொருள் கொள்க; என்ற

இரண்டெழுத்தினுல் : தொகுத்தல் விகாரம். ராம மந்திரப்பயன் : ஆ. 5 : 71, கு. 5 : 71. இரண்டெழுத்தால் ஆம் பயன் இவ்விரண்டு. (கள)

18. வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள *பாடையா தொன்றி னுயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

வடகலை - வடமொழி. தென்கலை - தமிழ். வடுகு - தெலுங்கு. இப் பாடல் பலமொழிகளிலுள்ள இராமாயணக்கதைகளுக்கும் பொது. (கஅ)

வேறு

19. வென்றிசே ரிலங்கை யானை வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி னிகழ்ந்திடு கதைக டம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமு முரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது வென்ருேர் தாமு நரகம தெய்தி டாரே.

வென்றிசேர் இலங்கையானை - முன்பு வெற்றியை யுடைய இராவணனை ; 'வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்ற வாறும்' (சீவக. 14, ந.) மால் வீரம் என்பது வீரராகவன் என்பதை நினைப்பிக்கின்றது. நரகமது ; அது : பகுதிப்பொருள் விகுதி. (கக)

வேறு

20. இராகவன் கதையி லொருகவி தன்னி
லேகபா தத்தினை யுரைப்போர்
பராவரு மலரோ னுலகினி லவனும்
பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர்பொற் பதமும்
பொன்றுநா ளதனினும் பொன்ற
அராவணை யமல னுலகெனும் பரம
பதத்தினை யணுகுவ ரன்றே.

ஏகபாதம் - ஓர் அடி. அவனும் - அந்தப்பிரமனும். பொற்பதம் - பொன்னுலகு. (உ0)

வேறு

21. இறுவ ரம்பினி ராமவென்றே றும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலான்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

இறுவரம்பின் - அந்தியகாலத்தில். உம்பர் - நித்தியசூரியர். 'அமரரேறே' (திருமாலை. 2.) நிறுவர் - நிலைத்து நிற்பார். மறு இல் - குற்றமற்ற. மாக்கதை : பாயிரம், 14, அடிக். (உக)

22. அன்ன தான மகிலநற் றானமும்
கன்னி தானங் கபிலையின் றானமும்
சொன்ன தான பலமெனச் சொல்லுவார்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

அகிலநல்தானமும் - நல்ல தானங்கள் எல்லாம். கபிலை - பசு. சொன்ன தானம்; சொன்னம் - பொன். இராமகதை : பாயிரம், 14, அடிக். (உஉ)

வேறு

23. மற்றொரு தவமும் வேண்டா மணிமதி லிலங்கை மூதூர்ச்
செற்றவன் விசையப் பாட [1] றெளிந்ததி லொன்று தன்னைக்
கற்றவர் கேட்போர் நெஞ்சங் கருதுவோ ரிவர்கள் பார்மேல்
உற்றர சாள்வர் பின்னு [2] மும்பராய் வீட்டிற் சேர்வார்.

உம்பர் - நித்திய சூரியர். சில பிரதிகளில் இச்செய்யுள் தனியன்களில் ஒன்றாகக் காணப்படுகிறது.

(பி - ம்.) [1] 'றெரிந்ததில்' [2] 'மும்பராயுலகிற் செல்வார்' (உஙு)

வேறு

24. ஆதியரி யோகம நாராயணர் திருக்கதை
யறிந்தனு தினம்பரவுவோர்
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதினி
றந்துசெக தண்ட முழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துள நினைத்தது
கிடைத்தருள் பொறுத்துமுடிவில்
சோதிவடி வாயழிவின் முத்திபெறு வாரெனவு
ரைத்தசுரு தித்தொகைகளே.

ஆதியரியோம் நம நாராயணா : இங்கே இராமர் என்றபடி. 'ஓம் நமோ நாராயண வென்றுரைத்துளமுருகி' (சு. 3 : 23); நாராயணனென்பது சந்தம் நோக்கி நராயணர் என்று திரிந்தது. 'நாராயணனை நராயணனென் றேகம்பன், ஓராமற் சொன்ன வுறுதியால் - நேராக, வாரென்றால் வரென் பேன் வாளென்றால் வள்ளென்பேன், நாரென்றால் நரென்பேன் நான்' (தனிப். காளமேகம்.) அழிவில் முத்தி - வைகுண்டம் சேர்ந்து அங்கே ஸ்திர மாக வாழ்வது. சுருதி - வேதம். (உச)

### வேறு

25. இனையநற் காதை முற்று
மெழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்
கரும்பொருள் கொடுத்துக் கேட்போர்
கனைகடற் புடவி மீதே
காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையம தறுத்து மேலாம்
விண்ணவன் பதத்திற் சேர்வார்.

புடவி - உலகம். வினையமது; அம் : சாரியை; அது : பகுதிப்பொருள் விகுதி. மேலாம் விண்ணவன் - திருமால். (உரு)

பாயிரம் முற்றும்.

---

# 1. ஆற்றுப் படலம்

ஆற்றினுடைய வருணனையைக் கூறும் படலம் ஆற்றுப் படலம் எனப் பெறும். இங்கே ஆறு என்றது சரயு நதியை.

### கோசலமும் ஆறும்

26. ஆச லம்புரி யைம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
[1] கோச லம்புனை யாற்றணி கூறுவாம்.

(ஆசலம் - இடும்பை; அற்பமாகிய குற்றமும் ஆம்.) 'அந்தக ராசலம் வந்தா லினையழை யாதிருப்பார்' (திருவரங்கத். 64.) ஐம்பொறி வாளி என்றது ஆடவருடைய இந்திரியங்களை; வாளி - அம்பு. ஆடவரின் ஐம் பொறிகளும் ஒருங்கே செல்லக்கூடிய இடமாக உள்ளவர் பெண்கள்; 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள' (குறள், 1111.) அலம்பு - ஒலிக்கின்ற.

பூசல் - போர்த்தொழிலமைந்த. நெறியின்புறம் செலா - ஒழுக்க நெறி தவறி அப்பாற் செல்லாத; எனவே, 'ஆடவர் தங்கள் தங்கள் ஸ்திரீகளிடத் திலும், பெண்கள் தங்கள் தங்கள் நாயகரிடத்திலும் அல்லாமல் பர நாரிய ரிடத்திலும் பர புருஷரிடத்திலும் காமஞ் செய்யாத' என்றபடி. ஐம் பொறியுங் காமமும்: 'பெய்த வைம்பொறி யும்பெருங் காமமும், வைத வெஞ்சொலின் மங்கையர் வாட்கணின், எய்த வைம்பெரு வாளியின்' (சூ. 12 : 35.)

கோசலம் புனை ஆறு: புனை என்றதனால் ஆறு மாலையாம்; குறிப் புருவகம். நாட்டுக்கு ஆறு அலங்காரம்: 'ஆறில்லா வூருக் கழகுபாழ்' (ஔவையார்.) ஒழுக்க நெறிக்கு நீர் காரணம்: 'நீரையின்றி யமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையின்றி ஒழுக்கம் நிரம்பாதென்று உரைப் பாருமுளர்' (குறள், உ0, பரி.)

இச்செய்யுளால் கதாநாயகன் கதாநாயகிகளின் பெருமைகள் புலப் படுகின்றன.

(பி - ம்.) [1] 'கோசலம்புன லாற்றணி', 'கோசலம்புன லாறது' (சு)

## மேகங்களின் செயல்

27. நீற ணிந்த கடவு ணிறத்தவான்
ஆற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே.

வான் - மேகங்கள்; எழுவாய். ஆறு அணிந்து சென்று - தாம் செல்லும் வழியை அலங்கரித்துக்கொண்டு. ஆர்கலி - கடல். மேய்ந்து: மேகங்களை மிருகங்களாகப் பாவித்தார்; 'மால்கடல் குடிக்கு மழை' (பரி. அ : 32); 'எம்மகோததியும் மாய மேய்மேகம்' (தக்க. 421.) வீறு - முலைமேல் தோற் றும் வீற்றுத் தெய்வம். மேனியின் - திருமேனியின் நிறம்போல்க் கறுத்து.

ஒப்பு: சீவக. 32. (உ)

28. பம்பி மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்
அம்பி [1] னாற்றுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர் வாரி [2] யெழுந்தது போன்றதே.

பம்பி - ஒலித்து; திணைமொழியைம். 17; (சென்று, நெருங்கி யென் பாருமுளர்); எழுந்து என்றுமாம். மேகம்: பன்மை. நம்பன் - நமக்கு இன்ன முறையை யுடையவன்; நமக்குச் சிறந்தான்; நம்பன் மாதுலன் - சிவபெருமானின் மாமனாகிய இமவான். அம்பின் - நீரால். ஆற்றுதும் - தணிவிப்போம். வாரி - கடல். நிறம் பற்றியும் பரப்புப் பற்றியும் அதிக நீரைத் தன்னிடம் கொண்டிருத்தல் பற்றியும் கடல் மேகத்துக்கு உவமை.

'மேகம் பரந்ததானது வாரி எழுந்தது போன்றது' என்று முடிக்க; 'சூனிற முகிற்குலம் . . . . நெடுங்கடல் வாரி மூரிவான், மேனிரைத் துள தென முழக்க மிக்கதே' (சு. 7 : 6) : தற்குறிப்பேற்றவணி.

(பி - ம்.) [1] 'னூட்டுது' [2] 'யெழுந்தன போன்றவே' (க)

29. புள்ளி [1] மால்வரை [2] பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை [3] வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி [4] யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.

புள்ளி மால்வரை - இமயமலை; 'புள்ளிமாநெடும் பொன்வரை' (சு. 8 : 19, கு. 7 : 53.) புள்ளி - நன்மதிப்பு (புள்ளி - இலக்கு; பல நிறமுமாம்). இமயம் பொன்னிறமானது; 'பொற்கோட்டிமயம்', 'பொன்னுடை நெடுங்கோட் டிமயம்' (புறநா. உ, ௩௬௯); 'இமயப் பொருப்பகஞ் சேர்ந்த . . . . . காக்கையும் பொன்னிறமாயிருக்கும்' (யா. கா. அவை.) நோக்கி : நோக்கல் நோக்கம்.

வெள்ளி வீழ்; வீழ் - விழுதுகள். மழைத் தாரைகளுக்கு வெள்ளி வீழ்; 'வெள்ளிவெண், கோல்நிரைத்தன போற்கொழுந் தாரைகள்' (சீவக. 33.)

1—2: 'இது பொன்மலை யானபடியினாலே இதனிடத்திலே வருஷிக்கிறது நமக்கு யோக்கியமென்று ஆகாசமானது வெள்ளி விழுதுகளை நெடுக இறக்கினதுபோல் மேகங்கள் தாரைகளைச் சொரிந்தன' (ஓர் உரை.)

உள்ளி - இம்மையிற் புகழையும் மறுமையில் மேலுலகம் அடைதலையும் நினைந்து; செல்வ நிலையாமையை உள்ளி எனலுமாம். 'நில்லா வுலகத்து நிலைமை தூக்கி' (பொருந. 176.)

உள்ளி . . . . வள்ளியோர் : 'ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய, தீதிலான் செல்வம்போல்' (கலி. உஎ: 1-2); 'வள்ளியோர் ஈகை வரையாது போல' (கல். 27.) வள்ளியோரின் வழங்கின மேகம். 'அவன், வண்மை போல் வானம் பொழிந்த நீர்' (பரி. உஉ : 7-8); 'அவன் கொடைப் போன் மெனப் பொழிந்த' (நைடத. நாடு உ.)

(பி - ம்.) [1] 'மாமேரு' [2] 'பொன்னெனல்' [3] 'வீழ்ந்தன தாரைகள்' [4] 'யுள்ளதெல்' (௬)

## வெள்ளப் பெருக்கு

30. [1] மான நந்தல னாகி மனுநெறி
போன [2] தண்குடை வேந்தன் புகழெனை
ஞான [3] முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே.

மானம்-பெருமை; அபிமானம் என்றுமாம். நந்தலனாகி-கெடாதவனாகி. நேர்ந்து (பி - ம்) - பொருந்தி. நோக்கி (பி - ம்) - பொருளாக நினைத்து.

வேந்தன் - தசரதன்; கதாபாத்திரங்களுக்குத் தொடர்புள்ளவற்றை உவமையாகக் கூறுவது கவிமரபு; பரி. உஉ : 1-8; சீவக. 32; நைடத. நாடு. உ. வேந்தன் புகழ் : 'முறையறிந் . . . . . நல்கு மிசைகெழு வேந்தன்' (65.) தழைத்தது - பரந்தது.

ஞான . . . . . மறையாளர் : 'ஞான நன்னெறி நல்வரம் பாயோன்' (சிலப். கஞ : 42); 'தானத்தாற் . . . . . ஞானத்தால் . . . . . நாட்டு' (சிறுபஞ்ச. 36.) ஞான . . . . . தானமென்னத் தழைத்தது : 'கயந்தரு நறும் புனல் . . . . . உயர்ந்தவர்க்குதவிய யுதவியொப்பவே' (458); 'உறக்குந் துணையதோர் . . . . . அறப்பயனும், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்' (நாலடி. 38); 'தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்றெரி வார்' (குறள், 104.) இங்கே தானமென்றது தசரத சக்கரவர்த்தி செய்த தானத்தை; 'மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்து தானக், கையார் புனலா னனையாதன கையு மில்லை' (184.)

(பி - ம்.) [1] 'மான நேர்ந்தறனேக்கி', 'மானநேர்ந்தறனேக்கு' [2] 'வெண்குடை' [3] 'முந்திய' (௭)

## நீத்தத்துக்கு உவமைகள்

31. தலையு மாகமுந் தாளுந் [1] தழீஇயதின்
[2] நிலைநி லாதிறை நின்றது போலவே

*மலையி [3] னுள்ளவெல் லாங்கொண்டு மண்டலால்*
*[4] விலையின் மாதரை யொத்தது வெள்ளமே.*

*தலை ஆகம் தாள்* - (மலையைக் குறிக்கும்போது) உச்சிமலை, பக்கமலை, அடிவாரம்; *தாள்* - பாதசைலம். *தழீஇ* - தழுவி. *அதின்* - அத்தழுவலின். *இறை* - சிறிது பொழுது. மலையினுள்ளவை இன்னவை யென்பது அடுத்த கவியால் விளக்கமுறும். விலையின்மாதரியல்பு : 'பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்', 'பொன்விலைப் பாவையர் மனமும் போற் பசையு மற்றதே', 'மெய்வரும் போக . . . . . முள்ளமும்' (120, 366, 583.)

(விலைமாதர் தேடிய பொருளெல்லாம் பிறந்த அகத்துக்கே யாதலால் மலையிலுள்ள பொருளெல்லாம் கடலிடம் சென்றன.)

(பி - ம்.) [1] 'தழீஇயுற' [2] 'நிலையிலா' [3] 'னுள்ளதெல்லாங்' [4] 'விலை கொண்' (சு)

32. *மணியும் பொன்னும் மயிற்றழைப் பீலியும்*
*அணியு மானைவெண் கோடு [1] மகிலுந்தன்*
*இணையி லாரமு மின்னகொண் டேகலால்*
*வணிக மாக்களை [2] யொத்தது வாரியே.*

*தழைப் பீலி* - இறகுகளாகிய கலாபம்; *தழை* - இறகு. *அணியும்* - அழகுசெய்யும். *ஆரம்* - சந்தனம்.

(பி - ம்.) [1] 'மகிலால்' [2] 'யொத்ததே' (எ)

33. *[1] பூநி ரைத்துமென் றாது பொருந்தியும்*
*தேன ளாவியுஞ் [2] செம்பொன் விராவியும்*
*[3] ஆனை மாமத மாற்றொ டளாவியும்*
*வான வில்லை நிகர்த்தது வாரியே.*

*நிரைத்து* - வரிசையாகப் பொருந்தி. *தாது* - மகரந்தப் பொடி. *விராவியும்* - சேர்ந்தும். *வாரி* - வெள்ளம். வானவில் ஐவண்ணமுடையது : பூ வெண்மை, தாது பொன்மை, தேன் சிவப்பு, பொன் பசுமை, ஆனை மதம் கருமை. ஆனை மதம் கரியதென்பது, 'கருங்கட மூன்றுகு நால்வாய்க் கரி' (சிந். 55) என்பதனால் விளங்கும்.

(பி - ம்.) [1] 'பூ நிரைத்த மென்' [2] 'செம்பொனளாவியும்' [3] 'ஆனைமாமத வாற்றொடளாவியும்', 'மான மாமணி யும்வரன் றேகலால்' (அ)

34. மலையெ டுத்து மரங்கள் [1] முறித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலால்
அலைக டற்றலை யன்றணை வேண்டிய
[2] நிலையு டைக்கவி [3] யொத்தது நீத்தமே.

மாடு - பக்கத்திலுள்ள. (இலை முதற்பொருள் - வாழை, கரும்பு.) மரங்கள் . . . . . ஏந்தலால் : ‘ குருந்தொடு மருதமுந்தி ’ (40.) அலைகடல் : வினைத்தொகை ; ‘ திரியுந் திரைக் கடல் ’ (சு. 7 : 42.) தலை : ஏழனுருபு. கவி - வானரசேனை. நீத்தம் - வெள்ளம். காவியங்களில் பின் நிகழ்ச்சிகளை முன்னே உவமையாகக் கூறுவது கவிமரபு.

(பி - ம்.) [1] ‘ தரித்து ’, ‘ பரித்து ’ [2] ‘ கலையுடைக் கவி ’ [3] ‘ நீத்தமந் ’ (சு)

35. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க [1] மேமிக வுட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே.

ஈக்கள் வண்டொடு மொய்த்தல் வெள்ளத்துக்கும் கட்குடியருக்கும் பொது. வரம்பு இகந்து - எல்லை கடந்து ; தேக்கெறிந்து - தேக்கமரங்களை எறிந்து ; ஏப்பம் விட்டு. வாக்கு தேன் - வார்க்கின்ற கள்.

(பி - ம்.) [1] ‘ மேமிகுநதுட்டெளி ’ (௧0)

36. பணைமு கக்கரி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் [1] தார்த்தள்ளி
[2] மணியு டைக்கொடி [3] வந்துமுந் தூன்றலால்
புணரி மேற்பொரப் போவது போன்றதே.

பணை - கொம்பு. மாக்கள் என்றது சேனையைக் குறிக்கும்போது குதிரைகளும் காலாட்களும் என்றும், வெள்ளத்தைக் குறிக்கும்போது சிங்கம், யாளி, புலி, காட்டுப் பசு, பன்றி முதலிய விலங்குகள் என்றும் பொருள் படும்.

ஆர்த்து - ஆரவாரம் பண்ணி. அள்ளி - வாரி. மணிக்கொடி - அழகை யுடைய பூங்கொடிகள், ஒலிக்கும் மணிகட்டிய துவசங்கள் ; ‘ செழுமணிக் கொடிகளென்னுங் கைகளை ’ (568.) ஊன்றல் - நாட்டுதல் ; ‘ அகலிரு விசும்பிலூன்றும் ’ (புறநா. உஉ௪.)

கொடியை முன்னே செல்ல விடுதலும் அதனை ஊன்றலும் போர் செய்வோர் மரபு.

(பி - ம்.) [1] 'தார்த்தலின்', 'தார்த்துவென்' [2] 'மணிமுரைக் கொடி' [3] 'தோன்ற வந்தூன்றலால்' (கக)

## சரயுவின் பெருமை

37. இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
[1] புரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
[2] வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்.

ஆற்றின் ஒழுக்கத்துக்கும் மனுகுலத்தரசர் ஒழுக்கத்துக்கும் பொதுத் தன்மை தூய்மையும் இடையறாமையுமாம்.

புரவு - காத்தல். சரயு: மானஸ ஸரஸிலிருந்து வருவது; 'மானச மடுவிற் றோன்றி வருதலாற் சரயு' (428); வைவஸ்வதமனு ஓரம்பினால் மானஸ ஸரஸின் கரையை உடைத்து இந்நதியை வருவித்தாரென்பது வரலாறு.

சரயு தாய் முலை யன்னது: 'மன்னுயி ரேமுற மலர்ஞாலம் புரவீன்று, பன்னீராற் பாய்புனல் பரந்தூட்டி . . . . . வகல் யாறு' (கலி. ௩௪: 1-3); 'புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி' (புறநா. ௬௮: 8-9.) சரயு வளர்ப்புத்தாய்: ரகு. ௧௩: 62.

உரவுநீர் - உலாவும் கடல் (பு. வெ. 231, உரை); மிகுதியான நீருமாம்; கடல்; அன்மொழித் தொகை. உரவு நீள் நிலம் (பி - ம்); உரவு - பரத்தல்.

(பி - ம்.) [1] 'பரவு' [2] 'வுரவுநீணிலத்' (கஉ)

குறிஞ்சி

## வேறு

38. கொடிச்சிய ரிடித்த சுண்ணங் குங்குமங் கோட்ட மேலம்
நடுக்குறு சாந்தஞ் சிந்தூ ரத்தொடு நரந்த நாகம்
[1] கடுக்கைநாள் வேங்கை கோங்கு பச்சிலை கண்டில் வெண்ணெய்
அடுக்கலி னடுத்த தீந்தே னகிலொடு நாறு மன்றே.

கொடிச்சியர் - குறிஞ்சிநில மகளிர். சுண்ணம் - வாசனைப்பொடி. கோட்டம் - வாசனையுள்ள ஒருவகைப் பூடு; 'கடலிடைக் கோட்டங்

தேய்த்துக் கழிவது கரும மன்றால்' (சு. 15 : 145); இது கொட்டமென்றும் வழங்கும். 'கொட்டமே கமழும்' (திருஞான. தே.); மலைநாட்டு வழக்கு; வைத்திய நூல்கள் குட்டம் என்று கூறும். நடுக்குறு சாந்தம் - பூசினால் நடுக்கமுறுவிக்கும் சந்தன மரம். சிந்தூரம் - ஒரு மரம். நரந்தம் - கஸ்தூரி. நாகம் - சுரபுன்னை. கடுக்கை - கொன்றை. நாள் வேங்கை - மணநாளை அறிவிக்கும் வேங்கை; 934 'இளவேங்கை நாளுரைப்ப..... இருவியா மேன வினி', 'நாள் வேங்கை'. (திணைமாலை நூற். 18, 20, 31.) பச்சிலை - தமாலம் என்னும் மரம். கண்டில் வெண்ணெய் - ஓமாலிகைத் திரவியங்கள் முப்பத்திரண்டினுள் ஒன்று; சீவக. 623, ந.; யானைக்கன்று பிறந்தவுடன் பால் அருந்துமுன் கழித்த மலம் என்பர்; கரிகூதம் என்பது இதன் வட மொழிப் பெயர்களில் ஒன்று.

(பி - ம்.) [1] 'கடுக்கை யார்' (கஅ)

பாலை

39. எயினர்வாழ் சீறூ ரப்பு
மாரியி னிரியல் [1] போக்கி
வயின்வயி னெயிற்றி மாதர்
வயிறலைத் தோட [2] வோட்டி
அயின்முகக் கணையும் வில்லும்
வாரிக்கொண் டலைக்கு நீரால்
[3] செயிரறுங் கொற்ற மன்னர்
சேனையை மானு மன்றே.

எயினர் - வேடர்; பாலைநில மக்கள். அப்புமாரி - நீரின் மிகுதி; அம்புகளாகிய மழை; சிலேடை. இரியல் போக்கி - ஓட்டி. அயில்முகக் கணை - கூரிய முனைகளையுடைய அம்புகள். பகைவரை வென்று அவருடைய பொருள்களைக் கைப்பற்றிக் கொள்ளுதல் வழக்கம். செயிர் அறும் கொற்றம் - குற்றமற்ற வெற்றி.

அலைக்கும் நீரால்; நீரால் - ஜலத்தினால், தன்மையால்; சிலேடை. இதில் முல்லையுங் குறிஞ்சியும் திரிந்த பாலை கூறப் படுகின்றது.

(பி - ம்.) [1] 'போக' [2] 'வோடி' [3] 'செயம்வருங்' (கக)

முல்லை

40. செறிநறுந் தயிரும் பாலும்
வெண்ணெயுஞ் [1] சேந்த நெய்யும்

உறியொடு வாரி யுண்டு
குருந்தொடு மருத முந்தி
[2] மறிவிழி யாயர் மாதர்
[3] வளை துகில் கவரு நீராற்
பொறிவரி யரவி னாடும்
புனிதனும் போன்ற தன்றே.

செறிநறுந்தயிர் - கட்டித் தயிர்; 'பாறைபடுதயிர்' (சீவக. 426); 'பாறைபடு வெண்டயிர்' (கூர்ம. கண்ணனவ. 111.) சேந்த - சிவந்த.

குருந்தொடு மருதம் உந்தி - குருந்த மரத்தையும் மருத மரத்தையும் தள்ளிக்கொண்டு. 'கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்' (சிலப். ஆய்ச்சியர்.); 'நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன், பானிற வண்ண னேக்கிற் பழியுடைத் தென்று ......... தொழுனை யாற்றுட், கோனிற வளையி னார்க்குக் குருந்தவ னொசித்தது' (சீவக. 209); மருதம் முரித்தது யசோதை உரலோடு கண்ணனைக் கயிற்றினால் பிணித்த அன்று. மறிவிழி - மான் போன்ற விழியையுடைய. புனிதன் - கண்ணன்.

(பி - ம்.) [1] 'சேர்ந்த', 'சேர்த்து' [2] 'மறியுடை' [3] 'வளை துகில்' (௪0)

## மருதம்

41. கதவினை முட்டி மள்ளர்
கையெடுத் தார்ப்ப [1] வோடி
நுதலணி யோடை பொங்க
நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தித்
தறியிறத் தடக்கை [2] சாய்த்து
[3] மதமலை போலங் நீத்தம்
மருதஞ்சென் [4] றடைந்த தன்றே.

கதவு - மதகுகளை அடுத்த கதவு; கோட்டையின் கதவு; கதவுகளை யானை முட்டல்: 'களிறும் கதவிறப் பாய்ந்த' (பு. வெ. 107.) மள்ளர் - உழவர், போர்வீரர்.

ஆர்ப்ப - ஆரவாரம் பண்ண.

நுதல் அணி ஓடை - சொல்லப்பட்ட அழகிய ஓடைகள்; யானையின் நெற்றிப்பட்டம். ததைமணி - நெருக்கமாக உள்ள ஒளிவிடும் மணிகள், ஒலிக்கும் மணிகள்; யானைக்கு மணிகட்டுவது வழக்கம். தறி - வெள்ளத்தைத்

நடுக்க நட்ட குதிரை முதலிய மரங்கள், யானைகட்டும் மரம்; தடக்கை - குளக்கரை; துதிக்கை. மதமலை - யானை. யானை ஆற்றுக்கு உவமை: 'மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த, சிறையழி புதுப்புனல்' (ஐங். எசு); 'வெலற்கருங் குஞ்சரம் வேட்டம் பட்டென . . . . . நிலைப்படா நிறைந்தன' (சீவக. 41.)

(பி - ம்.) [1] 'வேகி' [3] 'போச்சி' [3] 'மதமழை யானையென்ன' [4] 'றடைந்த மாதோ' (சுகூ)

## திணை மயக்கம்

42. முல்லையைக் குறிஞ்சி யாக்கி
மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப்
பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா
மிடைதடு மாறு நீராற்
[1]செல்லுமக் கதியிற் செல்லும்
வினையெனச் சென்ற தன்றே.

புல்லிய நெய்தல் - மென்புலம். பொருவரு - ஒப்பில்லாத. தடுமாறல் - ஒன்றிருக்க வேண்டிய இடத்தில் மற்றொன்றிருத்தல்; 'தடுமாறுருபுகள்' (இ. கொ. வேற்றுமை. 49.) செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றது: 'ஒரு ஜெனனத்திலே பண்ணின வினை வேறொரு ஜெனனத்திலே வந்து ஜெனனங்கள் எல்லாம் தொடர்ந்து வருகிறதுபோல இருந்தது' (ஓர் உரை.) வினையாற் பல கதியிற் பிறத்தல்: 'உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப், பெயரும் பல்கதிப் பிறக்கு மாறுபோல்', 'நல்வினை . . . . . மாறிய பிறப்புத் தேடி வருவபோல்' (100, 425); 'நாவாய் . . . . . அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியி னமரர்வையத், திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்ன லான' (உ. 11 : 46.) (வினையானது தேவரை மனிசராக்கியும் அவரை இழிகுலமாக்கியும், இழிகுலத்தை மிருகமாக்கியும் செய்வதுபோல ஒரு நிலத்துப் பொருளை மற்றொரு நிலத்துப் பொருளாக் கிற்று வெள்ளம்.)

(பி - ம்.) [1] 'செல்லுறு' (சுஎ)

### பல கால்களாகப் பிரிதல்

43. [1] காத்தகான் மள்ளர் வெள்ளக்
கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேர்த்தநீர்த் [2] துவலை பொன்னு
[3] முத்தமுந் திரையின் வீசி
நீத்தம்வான் [4] றலைய தாகி
நிமிர்ந்தபார் கிழிய நீண்டு
கோத்தகா [5] லொன்றோ டொன்றின்
குலமெனப் [6] பிரிந்த தன்றே.

காத்த - அணைகள் போட்டுத் தண்ணீரைக் காத்துக்கொண்டிருந்த. கார்த்த (பி - ம்) - கறுத்த; 'கருங்கான் மள்ளர்' (திருவிளை. நாட்டு. 25.) கலிப்பறை - ஒலியையுடைய பறை. கறங்க - ஒலிக்க. வெள்ளத்தை அடக்கப் பறை அறைதல்: 'வையைத் திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை யறைகெனும், உரைச்சிறைப் பறையெழ' (பரி. சு : 22-4); 'மன்ற றிகழ் தென் கரைகடந்து மதுரை நகர்புகக்கண்டு, துன்று மிரவிற் பறையறையுஞ் சும்மை கேட்டு' (திருவால. ருo : 5); 'வெறித் தடக்கை மதயானை மந்திரிகள் வேறு வேறு பல குடிகளும் . . . . . அறுத்துவிட்டு நகரெங்கணும் பறையறைந் தழைத்து' (திருவிளை. மண்சுமந்த. 3.) கரைகாப்பவர் ஆர்த்தல்: 'கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர், செவ்வனா ருயிரஞ் சிலைக்கும் பம்பையும்' (சீவக. 42.) கைபோய் - விரைந்து சென்று; ஒழுங்காகச் சென்று. துவலை - துளி; 'தூத னிட்ட மலையின் றுவலையால்' (சு. 7 : 37.) கோத்தகால் . . . . . பிரிந்த : 'ஆதியிலே ஒரு நதியாய்ப் பின்பு வேறு வேறானது எப்படி யிருந்த தென்றால், ஆதிகாலத்திலே பிரம்மாவினிடத்திலே பிறந்த பிரம வங்கிசமானது பின்பு அனந்தம் குலங்களாகப் பிரிந்தது போலும் இருந்தது' (ஓர் உரை.) (குலம் ஒன்றில் அனேகம் பெயர் உற்பவித்தாற் போல ஆற்றிற் கால்கள் பல பிரிந்தன.)

'பிரிந்ததன்றே' என்பதற்கு நீத்தம் தோன்றா வெழுவாய்; 'பிரிந்த வன்றே' என்ற பாடத்துக்கும் 'கோத்த கால்' எழுவாய்; கால் - கால்கள்.

(பி - ம்.) [1] 'கார்த்த கான்' [2] 'திவலை' [3] 'முத்தொடு' [4] 'றலையவாகி' [5] 'லொன்றொ டொன்றின்' [6] 'பிரிந்த வன்றே' (சுஅ)

44. கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்

எல்லையின் [1] மறைக ளாலு
மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி னொன்றே யாகித்
துறைதொறும் [2] பிரிந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
பொருளும்போற் [3] பரந்த வன்றே.

கல் - இமயமலை. கல்லிடை. . . . . . நீத்தம்: 'மலைதலைய கடற் காவிரி' (பட்டினப். 1.) பொருள் - பரப்பிரமம்; 3. துறை தொறும் - இடங்கள் தோறும்; அந்த அந்தச் சமயங்கள்தோறும். சூழ்ச்சி - சூழ்ச்சியால். 'தடக்கை பிடித்தான் - தடக்கையால் பிடித்தான்' (1338) என்பதுபோல.

ஒப்பு: 'ஒன்றாகி மூலத்துருவம் பலவாகி யுணர்வு முயிரும் பிறிதாகி' கூ. 2 : 30.

(பி - ம்.) [1] 'மறைக ளாலும்' [2] 'பரந்த' [3] 'பரந்த தன்றே' (கக)

## புனல் எங்கும் பரத்தல்

45. தாதுகு சோலை தோறுஞ்
[1] சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
[2] புதுமணத் தடங்க டோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு
முயிரென வுலாய தன்றே.

சந்தனக்காடு (பி-ம்): 'சந்தக்காவெலாம்' (47.) போதவிழ் பொய்கை - அரும்புகள் முறுக்கு அவிழ்கின்ற பொய்கை; பொய்கை - மானிடராக்காத நீர்நிலை' (சீவக. 337, ந.) புதுமணத் தடங்கள் - புதுமணத்தைக் கொண்ட தடாகங்கள். மாதவி - குருக்கத்தி. பூகவனம் - கமுகந் தோட்டம்.

ஓதியவுடம்பு - நாற்கதி முதலியவாக நூல்களால் ஓதப்பட்ட உடம்பினை. உடம்புதோறுமுள்ள உயிர்: மகத் பரிமாணம், மத்திம பரிமாணம், அணு பரிமாணம் என்ற மூன்றில் இது மத்திம பரிமாணம்; மத்திம பரிமாண மாவது புலப்பட்டும் புலப்படாமலும் இருத்தல்; 'வ்யக்தா வ்யக்தம்' எனப்

படும். 'ஜீவன் ஒன்றே பல உடல்களை எடுத்துக்கொள்ளுகிறது' என்ற கொள்கையை ஒட்டிக் கம்பர் இதனைக் கூறினர். 'வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கும், ஊனு முயிரு முணர்வும்போ லுள்ளும் புறத்து முளனென்ப' (உ. 1 : 1.) ஓதிய . . . . . வுயிரென - 'எந்தச் செனனமெடுப்பினும் அந்த அந்த உடம்புகளிலே போய் நுழையப் பட்ட ஆத்மாவைப் போல' (ஓர் உரை.)

(பி-ம்.) [1] 'சந்தனக் காடு', 'சண்பகக் காவு' [2] 'புதுமணற் றடங்கள்' (உO)

ஆற்றுப்படலம் முற்றும்

---

# 2. நாட்டுப் படலம்

நாட்டுப் படலம்—கோசல நாட்டின் இயல்பைக் கூறும் பகுதி. கோசல நாட்டாரின் செல்வமிகுதி, கல்வி, கேள்வி யறிவு, ஆடல் பாடல் முதலிய கலைகள், காதல், வீரம், வாணிகம், அறம், ஒழுக்கம், பலவகை வேள்வி, திருவிழா முதலியன இப்பகுதியில் அழகு தோன்ற வருணிக்கப் பெற்றுள்ளன.

46. **வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்**
**தீங்கவி செவிக ளாரத் தேவரும் [1] பருகச் செய்தான்**
**ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு [2] நறவை மாந்தி**
**மூங்கையான் [3] பேச லுற்றா னென்னயான் மொழிய லுற்றேன்.**

வாங்கரும் - வாங்குதற்கு அரிய; அவர் பாடிய சுலோகத்தில் ஓர் அடியை எடுத்துவிட்டுப் புதிதாக ஒன்றைப் புகுத்தமுடியாது என்பது கருத்து. பாதம் நான்கு - நான்கு அடிகள். நான்கு பாதங்களாலான சுலோகம் வான்மீகிக்கு முன்பில்லை; இவரே முதலில் செய்தவர்; ஆதலின் இவர் ஆதிகவி. வான்மீகியின் தீங்கவி : 'வசையறு மதுரவான் மீகி' (எ. 15 : 142.) தேவரும் பருகச் செய்தான் : வான்மீகிராமாயணத்தின் பலச்ருதியில், 'தேவரும் கேட்டு மகிழ்ந்தனர்' என்பர். நறவம் - தேன். மூங்கையான் . . . . . பேசலுற்றான்; தற்றலப். அவை.

(பி-ம்.) [1] 'பகரச்' [2] 'நறவு மாந்தி' [3] 'மொழிய' (க)

47\. வரம்பெலா முத்தந் தத்து மடையெலாட் பணில மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்வை
பரம்பெலாம் பவளஞ் சாலிப் பரப்பெலா மன்னம் பாங்கர்க்
[1] கரும்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.

பணிலமென்றது முத்திற்குக் காரணம் கூறியது; வரம்பில் முத்தை யீன்ற பணிலம் மடையிலுள்ளதென்றபடி. குரம்பு - அணை. மேதி - எருமை. மேதிக் குழியெலாம் கழுநீர்: 'குழியெலாங் கழுநீ ராகி' (980); 'கழுநீர் மேய்ந்த கயவா யெருமை' (சிறுபாண். 42.) பரம்பு - பரம்பு அடிக்கும் பலகை; 52. சாலி - நெல். சாலிப் பரப்பில் அன்னம்: 51.

கரும்பெலாம் செந்தேன்: 'கரும்பி னணிமடற் றொடுத்த, நிறையுறு தீந்தேன்' (பெருங். க. 48: 146-7); 'தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தேன்' (சீவக. 712.)

(பி - ம்.) [1] 'கரம்பெலாம்' (உ)

48\. ஆறுபா யரவ மள்ள [1] ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோசை வேலைச் [2] சங்கின்வாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
[3] மாறுமா றாகித் தம்மின் [4] மயங்குமா மருத வேலி.

அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி: ஒரு பொருட் பன்மொழி. மள்ளர் - உழவர். வேலை - கடற்கரை.

(பி - ம்.) [1] 'ராலைவா யமலை' [2] 'சங்குவாய்' [3] 'மாறு மாறுடைப் பாடை', 'மாறு மாறுகிப் பாடை' [4] 'வயங்குமா' (ங)

49\. தண்டலை மயில்க ளாடத் தாமரை [1] விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக் [2] குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி [3] மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் [4] றிருக்கு மாதோ.

தண்டலை - சோலையில். தாமரை விளக்கம்: 'செந்தா மரைபூத் தெனத்தீப மெடுத்த தன்றே' (972); 'விளக்கி னன்ன சுடர்விடு தாமரை' (நற். ௩௰: 1.)

கொண்டலுக்கு முழவு: மலைபடு. 1-3; அகநா. ௩௨௮: 1-2; நற். ௩௩௩: 3-6; குறுந். ௩௨௩. 'புலனோந்தும்' (திருஞா. தே.) குவளை கண்விழித்து நோக்கல்: 'முழுநீர் விழிபோல், மைத்தலர் நீல மலர்வயல்'

(தஞ்சை. 425.) எழினி - சித்திரம் எழுதிய திரைச் சீலை. கந்த. திருவவதாரப். 111. மகரயாழ் - பத்தொன்பது நரம்பு கட்டின வீணை; சீவக. 608. ந. (மகர மீன் முகம் போலும் யாழ்); 149, 154, 167. தேம்பிழி மகரயாழ்: யாழின்இசைக்கு ஆகுபெயர்; 'குழலினிதி யாழினிதென்ப' (குறள், 66.) வண்டுக்கு மகரயாழ்: மணி. ச: 4.

(பி - ம்.) [1] 'விளக்க மேந்தக்' [2] 'குவளைகள் விழித்து' [3] 'மதுர யாழின்' (ச)

50. தாமரைப் படுவ வண்டுந் தகைவரு திருவுந் தண்டார்க்
காமுகர்ப் படுவ மாதர் கண்களுங் காம னம்பும்
மாமுகிற் படுவ வாரிப் பவளமும் வயங்கு முத்தும்
நாமுதற் படுவ மெய்யு நாமநூற் பொருளு மன்றே.

தகைவரு - அழகு வளர்கின்ற. காமுகரிடத்தே படுவன. 'மாமுகிற் . . . . . முத்தும்;' மேகங்கள் கடலிலுள்ள பவளங்களையும் முத்துக்களையும் தண்ணீருடனே குடித்துவிட்டுப் பொழியும் என்றபடி. நாமுதல் - நாவினிடத்தே. நாமம் - புகழ். படுவ - உண்டாவன. (ரு)

51. நீரிடை யுறங்குஞ் சங்க நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை [1] யுறங்குந் தோகை.

நிழலிடை யுறங்கு மேதி: சிறுபாண். 42-6; அகநா. கக: 15-7. தார் - பூ; மாலையுமாம். தூர் - 'ஆழமான பள்ளங்களிலே இருக்கிற சேற்றோடே கூடிய மரத்தினது வேர்ச் சந்துகள்' (ஓர் உரை.) இப்பி - சிப்பி. போர் - நெற்போர்.

(பி- ம்.) [1] 'யுறங்கு மேகம்' (சு)

52. படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையு [1] நெல்லின்
மிடைபசுங் கதிரு மீன்ற மென்கழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு மாதோ.

படை - கலப்பை; கொழு. படைச் சாலில் எழுந்த. பணிலங்கள் - சங்குகள். ஈன்ற - கணுக்கள்தோறும் முத்துக்களை யீன்ற. கடைசியர் - பள்ளத்திகள். கண்மலர்ந்தொளிரும்; கடைநிலைத்தீவகம். பொன்னும்

முத்தும், தொகையும், கதிரும் கண் மலர்ந்து; கண் - இடம். கரும்பு கண் மலர்ந்து; கண் - கணு. வண்டு கண்ணைப்போல மலர்ந்து. முகம் கண்கள் மலரப்பெற்று. போது கள்மலர்ந்து.

(பி- ம்.) [1] 'செல்லும், மிடைபசுங் கதிர்க ளீன்ற மென்றழைக் கரும்பும்' (எ)

53. [1] தெள்விளிச் சீறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே.

தெள்விளி - தெளிந்த இசை; 'தீந்தொடை மகர வீணைத் தெள்விளி' (சீவக. 608.) [தெளிந்த மிடற்றோசை] சீறியாழ்ப்பாணர் - சிறுபாணர்; 'இன்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ' (சிறுபாண். 35.) இவர் பெரும்பாண ரினும் வேறாயவர். தேம்பிழி நறவம் - தேனாற் சமைத்த கள்; குறிஞ்சி. 155; அகநா. எஅ : 7; பெருங். உ. 2 : 177. வள்விசி கருவி - வாரால் கட்டிய முழவம்; 154. பம்ப - ஒலிக்க. பாடல் - வைகறைப் பாடல். பாடல் மயிலைத் துயிலெழுப்பும்.

(பி - ம்.) [1] 'தெள்ளிய சிறியாழ்ப்' (அ)

54. ஆலைவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனும்
[1] சோலைவாய்க் கனியின் றேனுந் [2] தொடையிழி யிறாலின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப [3] நுங்கி மீனெலாங் களிக்கு மாதோ.

கரும்பின் தேன் - கருப்பஞ் சாறு. அரிதலை - அரிந்த தலையை யுடைய. பாளை - தெங்கு முதலியவற்றின் பாளை. பாளைத் தேன் : பரி. எ : 34-5, பரிமேல்; பாளை தந்த மது : 69. 'வாளையும் . . . . . பாளையந் தேறல் . . . . . பழனங்களே' (இறை. 23. மேற்.) 'கமுகி னெற்றிப் பூ மாண்ட தீந் தேன்' (சீவக. 31); தே. 4303. இறால் - தேனடை. தொடையிழி என்றதனாற் கொம்புத்தேன் என்றவாறு. வரம்பு இகந்து என்றது அளவில் லாமல் கழனி, குளம், ஏரி முதலானவையெல்லாம் அழித்துக்கொண்டு என்றபடி. வங்கம் - கப்பல். நுங்கி - விழுங்கி; 'நுங்குவ ருலகையோர் நொடியில்' (211.)

(பி - ம்.) [1] 'சோலைவாய் மலரின்' [2] 'தொடையுளி யிறாலின்' [3] 'வுண்டு' (க)

55. பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் [1] களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் [2] பிழைப்பரோ சிறியோர் பெற்றால்.

கண்ணுக்குக் குவளை ; கை கால் முகங்களுக்குத் தாமரை ; வாய்க்குச் செவ்வாம்பல். ஆடவர் களை பறித்தல் : 547 ; சீவக. 51. பெண்கள் பால் . . . . . பெற்றால் - 'அற்ப அறிவுடையவரும் பெண்கள்மேலே ஆசை வைத்தால் பிழைக்கமாட்டார்கள்' (ஒர் உரை.)

(பி - ம்.) [1] 'களைகிலா துலாவி' [2] 'மறப்பரோ' (௬௦)

56. புதுப்புனல் குடையு மாதர் [1] பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்க மென்றால்
[2] மதுப்போதி மழலைச் செவ்வாய் வாட்கடைக் கண்ணின் மைந்தர்
[3] விதுப்புற நோக்கு மன்னார் மிகுதியை விளம்ப லாமோ.

நாவி - கஸ்தூரி. கதுப்பு - கூந்தல். வெறி - மணம். விதுப்பு - விரைந்த விருப்பம் ; 'நெஞ்சே, ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத், தோரே ருழவன் போலப், பெருவிதுப் புற்றன்றால்' (குறுந். ௧௩௧) ; 'வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று' (அகநா. ௧௩௬ : 8) ; 'புணர்ச்சி விதும்பல்' (குறள், அதி. 129).

ஒப்பு : 'குரும்பைவெம் முலையா ராடக் கூந்தலி னறவந் தோய்ந்த, இரும்புன லாறு பாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க், கருங்கடல் புலவு நீங்கி நறுமணங் கமழு மென்றால், முருந்துறழ் மூர லார்தம் மிகுதியை மொழிய லாமோ' (நைடத. நாட்டுப். 11.)

(பி - ம்.) [1] 'போதொடு நாவி' [2] 'மதுப்பொழி', 'மதுப்பொலி' [3] 'விதிர்ப்புற நோக்கு மின்னார்' (௬௧)

57. வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் [1] கோல மைந்தர் குடைந்தநீர்க் கொள்ளைச் [2] சாற்றில்
தண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்
[3] வண்டலிட் டோட மண்ணு மதுகர மொய்க்கு மாதோ.

வெண்டளம் - பச்சைக் கருப்பூரம். வெண்டளக் கலவைச் சேறு : ௪. 1 : 16 ; 'குங்குமத்தளம்' (தக்க. 42, உரை.) நீர்ச்சாற்றில் - புதுப்புனல் விழவில். கொள்ளைச்சாற்றில், சேறும் சாந்தும் பரப்பிலும், வேலியிலும்,

வைப்பிலும் வண்டலிட்டோட மதுகரம் மொய்க்கும். 'கொள்ளைச் சாறும்' என்ற பாடங் கொள்ளின் 'வண்டலிட்டோடும்' என முடிக்க.

ஒப்பு : 1-2 : 1130.

(பி - ம்.) [1] 'கோதை மாதர்' [2] 'சாறும்', 'சேற்றில்' [3] 'வண்டலிட் டோடும்' (௫௭)

58. சேலுண்ட [1]வொண்க ணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் [2]தேரைதா லாட்டும் பண்ணை.

சேல் உண்ட - சேல் என்னும் மீனை ஒத்த. ஒண்கணாரில்; இல் : ஐந்தனுருபு. சேலுண்ட . . . . . லன்னம் 'பள்ளத்திகளுடைய நடையைக் கற்றுக் கொள்ளவேண்டிக் குஞ்சுகளை மறந்துவிட்டு அவர்கள் வீட்டிலே போய் அவர்கள் பின்னே திரிந்துகொண்டிருக்கிற அன்னங்கள்' (ஓர் உரை.) (மாலுண்ட நளினம் - பெருமையையுடைய நளினம். காலுண்ட சேற்று மேதி - சேறு படிந்த கால்களையுடைய எருமைகள்). கன்றுள்ளப் பால்சொரிதல் : 70 ; 'மோட்டெருமை வாவிபுக முட்டவரால் கன்றென்று, வீட்டளவும் பால்சொரியும்' (கம்பர் தனிப்.) 'கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி, நினைத்து முலைவழியே நின்றுபால் சோர (திவ். திருப்பாவை, 49) ; உணவு கொடுக்கவும் தாலாட்டவும் அன்னங்களுக்குப் பொழுதில்லை. பண்ணை - வயலில்.

முடிபு : அன்னம் வளர்த்திய பிள்ளை உண்டு துயிலும்படி தேரை தாலாட்டும் .

(பி - ம்.) [1] 'வண்கணாரிற்' [2] 'தேரைதாராட்டும்', 'தேரை பாராட்டும்' (௫௮)

59. குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி [1]மகளி ரோடு மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

குயிலினம் - சேவலும் பெடையுமாகிய குயில்கள். குனிக்கும் - ஆடுகின்ற. பயிலல் - நெருக்கம். எழ - எழும்படி. தும்பி - வண்டுகள். செவ்வழி : மாலைப் பொழுதிற்குரிய பண். செவ்வழி : புறநா. ௧௪௯ : 1-3. காலையிற் செவ்வழி பாடியது தேனுண்ட மயக்கத்தால்.

(பி - ம்.) [1] 'மகளிராடு'

'குயிலின'த்துக்குப் பின் கீழ்வரும் பாடல் ஒரு பிரதியிற் காணப் படுகிறது :

> 'காளையர் சேறு தன்னைக் கலந்துடன் மிதித்து நட்ட
> தாள்களுங் கழுநீர் நாறுந் தடக்கையு மதுவே, நாறும்
> ஆளையுஞ் சீறிப் பீறி யணிமலர்க் கமுகிற் பாய்ந்த
> வாளையும் பாளை நாறும் வயல்களு மதுவே நாறும். (கச)

**60.** பொருந்திய மகளி ரோடு வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் [1] றன்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரும்
மருந்தினு மினிய கேள்வி செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்பு வாரும்.

பொருந்திய மகளிர் - பிறப்புமுதலிய பத்துவகையாலும் ஒத்த மகளிர். இயல் - பாஷைப் பாட்டு. பருந்தொடு . . . . . இயலிசை : 'பருந்து நிழலும் போற் பாட்டு மெழாலும்' (சீவக. 730); 'பருந்தும் நிழலுமெனப் பாவும் உரையும்' (சிலப். அடியார். உரைப்பா); 'பாற்றி யக்கமு நீழலு மாமெனப் பாட' (கந்த. திருக்கல். 1) 'பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் அம்முறையே மேன்மே லுயர்கின்றாற்போலப் பாடவேண்டுதலின்' (சீவக. 730. ந.) 'வீணையினது தந்திியைப்போல் கண்டத் தொனியுங்கூட்டிப் பாடுகிறபேரும்' (ஓர் உரை.)

மருந்தினும் இனிய கேள்வி : 'செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின், ஆன்றாரோ டொப்பர் நிலத்து' (குறள். 413.) விருந்தினர் முகங் கண்டன்ன விழா : 'அசாஅத்தா னுற்ற வருத்த முசாஅத்தன், கேளிரைக் காணக் கெடும்' (நாலடி. 201.)

(பி - ம்.) [1] 'றென்ன' (கரு)

**61.** கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்புறு சூட்டுங் காட்டி
[1] உறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் [2] மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு வாரணம் பொருத்து வாரும்.

கறுப்பு - வெகுளி. கண்ணின் - கண்ணைக்காட்டிலும். சூட்டு - உச்சிக் கொண்டை. உறுப்புறுபடை - கால்கள் மூக்கு என்னும் உறுப்புக்களாலியன்ற படை ; காலாயுதம் என்பது கோழிக்கு ஒரு பெயர். பகையின்றிச் சீறி : 'கறுவொடு மொன்றோ டொன்று காரண மின்றிச் சீறி' (நைடத. நாட்டுப். 3.) வெம்போர் மதுகைய - வெம்போரில் வலிமையை யுடையனவாகிய.

மறுப்பட - குற்றம்பட. [ஆக்கை மறுப்பட (பி. ம்.) - உடம்பு கிழிபட.] வாரணம் - கோழிகள். கோழி வென்றி: சீவக. 73, 120; பு. வெ. 348.

(பி - ம்.) [1] 'உறுப்புடைபடை' [2] 'மதுகையர் வீரவாக்கை' (கசு)

62. எருமைநா கீன்ற செங்க [1]ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய் வெகுண்டன [2]வனைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப [3]வஞ்சுற வார்க்கின் றாரும்.

எருமை நாகு - பெண் எருமை (பெரும்பாண். 165.) ஏற்றை - கடா. 'துருவை மென்பிணை யீன்ற . . . . . யேற்றை' (75.) உரும் - இடி. ஊழ் உற - முறைப்படியே. எருமைக் கடாக்களுக்கு இருள். ஒன்றாய்விரிந்த இருள். வெகுண்டன அனைய - கோபங் கொண்டனவாகிய அத்தகைய கடாக்களை. அரி இனம் - வண்டின் சாதிகள். குஞ்சியார்ப்ப - குடுமிகளினின்றும் எழுந்து ஆரவாரிக்க. அஞ்சுற - கேட்போர் அச்சமடையும்படி. மஞ்சுற என்ற பாடத்துக்கு மேகமண்டலத்தைப் பொருந்த என்பது பொருள். மேகத்தை ஒப்ப எனினும் ஆம். ஆர்ப்பவர் வீரர் என்றபடி.

(பி - ம்.) [1] 'ணேற்றிணோ டேற்றை', 'ணேற்றிணோ டேறு சீற்றத்' [2] 'வதனை' [3] 'மஞ்சுற' (கஎ)

63. முள்ளரை முளரி வெள்ளி முளையிற முத்தும் பொன்னும்
தள்ளுற மணிகள் [1]சிந்திச் சலஞ்சலம் புலம்பச் சாலில்
துள்ளிமீன் றுடிப்ப வாமை [2]தலைபுடை சுரிப்பத் தூம்பின்
உள்வரா லொளிப்ப மள்ள ருழுபக டுரப்பு வாரும்.

வெள்ளி - வெள்ளை; 493. இற - ஒடிய. முளரி வெள்ளி முளையிற - 'தாமரைக் கிழங்கின் வெள்ளிய வேர்கள் அறுந்துபோக (ஓர் உரை.) தள்ளுற - சிந்த; 'எள்ளு மேனலும் . . . . . தள்ளு நீர்மையில்' (99) மணிகள் - முத்துக்களை. புலம்ப - தனிமையடைய. சுரிப்ப - அடக்கிக் கொள்ள; 'ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்' (குறள். 126.) தூம்பு - மதகு. உரப்புதல் - அதட்டி ஓட்டுதல்.

(பி - ம்.) [1] 'சிந்தச்' [2] 'தலையுறை'

61-3. பொருத்துவாரும், ஆர்க்கின்றாரும், உரப்புவாரும் ஆயினரென ஒருசொல் வருவித்து முடிக்க. (கஅ)

64. முந்துமுக் கனியி னொடு முதிரையின் [1] முழுத்த நெய்யில்
செந்தயிர்க் கண்டங் கண்ட மிடையிடை செறிந்த [2] சோற்றில்
தந்தமி லிருந்து தாமும் [3] விருந்தொடுந் தமரி னோடும்
[4] அந்தணர் முதலோ ருண்டி யயில்வுறு [5] மமலை யெங்கும்.

நானா - பலவகையான; 176. [முதிரை - அவரை, துவரை, கடலை, சிறுபயறு.] [தயிர்க்கண்டம் - கட்டித்தயிர் : கண்டம் - கண்ட சருக்கரை.] செறிந்த சோறு - 'சன்னச்சம்பாவரிசிச் சோறு' (ஓர் உரை.) விருந்து - புதியராக வந்தவர். அந்தணர் முதலோர் - பிராமணர் முதலிய நான்கு வருணத்தாரும் பிறரும். [தமதுண்டென்ன (பி. ம்.) - தம்முடைய பாகத்தைப் புசித்த இன்பம்போல.] 'அந்தண ரமுதருத்தி - பிராமணர்களைப் போசனம் பண்ணுவித்து' (ஓர் உரை); 'வேதியர்க் கருத்திப் பின்னர் விருந்தொடு நுகர்வர்' (நைடத. நாட்டுப். 14.) அயில்வுறும் அமலை - உண்ணும் ஆரவாரம். 'ஊணொலி யரவம்' (புறநா. கஎரு : 4.) தம்தம் இல் இருந்து விருந்து ஓம்புதல் : 'தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்' (குறள். 1107.)

(பி - ம்.) [1] 'முகிழ்த்த' [2] 'சோற்றை' [3] 'விருந்தொடு தமதுண்டென்ன' [4] 'அந்தண ரமுத வுண்டி', 'அந்தண ரமுத ருத்தி' [5] 'மமலைத் தெங்கும்'

(கக)

65. முறையறிந் [1] தவாவை நீக்கி முனிவுழி முனிந்து [2] வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு [3] மிசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதல மதனிற் பொன்னின்
நிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல்.

முறை - மனுமுறையை. முனிவுழி முனிந்து - தண்டிக்க வேண்டிய விடத்துத் தண்டித்து; முனிவு - கோபம். வெஃகும் இறை - விரும்பிக் கொள்ளத்தக்க வரிப்பொருளை; 'இறை அறிந்து உயிர்க்கு நல்கும் - ஓர் ஆன்மாவுக்குப் பிராண ஆனி வருமிடத்து விரைந்து போய் அந்த வுபத்திர வத்தை நீக்கி ரட்சிக்கும்' (ஓர் உரை); இப்பொருளின்படி இறை என்ப தற்கு இறந்து படுதல் என்பது பொருளாம்; 'பிரிந்திறை சூழாதி யைய' (கலி. கஅ : 2 ந.) வேந்தன் - தசரதன். இசைகெழுவேந்தன்; 30. பரம் - பாரமென்பதன் விகாரம். [வேந்தன் நீதிமுறையினாற் காக்கப் பாரம் நீங்கிய பூமி.] உயிர்க்கும் - பெருமூச்சுவிடும். சொரிந்து - கரையினிடத்தே இறக்கி. வங்கம் நெய்தல் நெடுமுதுகாற்றும் - கப்பல்கள் தம் நெடிய முதுகைக் கடற்கரையில் ஆற்றிக்கொள்ளும். பொறைதவிர்ந்த பூதலத்திற்குக்

கப்பல்கள் பொறையைக் கொடுக்குமென்றபடி. முதுகாற்றல். : 758; 2. 12. 34. கலம் நிதி சொரிதல் : 83.

(பி - ம்.) [1] 'தவாவி னீங்கி' [2] 'வைகும்' [3] 'மிருநில வேந்தன் காக்கும்' (௨௦)

66. எறிதரு மரியின் சும்மை
யெடுத்துவா னிட்ட போர்கள்
[1]குறிகொளும் போத்திற் கொல்வார்
[2] கொன்றநெற் குவைகள் செய்வார்
வறியவர்க் குதவி மிக்க
விருந்துண மனையி னுய்ப்பான்
நெறிகளும் புதைப்பப் பண்டி
நிரைத்துமண் ணெளிய வூர்வார்.

எறிதரும் - அரியப்பட்ட. சும்மை - சுமை; விகாரம். குறிகளும் போற்றிக் கொள்வார் என்றபாடத்திற்கு - அடையாள முத்திரைகளையும் வைத்துக் கொள்வார்கள். போர் போட்ட பின் நெல் அடித்தல் சில நாட்டு வழக்கம். இரவில் போர்களைக் கலைத்து அரிகளை எவரும் எடுத்து விடாதபடி போர்களின் பலபக்கங்களில் சாணத்தையும் மண்ணையும் பிசைந்திட்டு எழுத்து அடையாளமிட்ட பலகையைக் கொண்டு முத்திரையிடுவதுண்டு. குறி கொளும் போத்திற் கொல்வார் - தூண்டுவோரின் குறிப்பிற் செல்லும் எருமைக் கடாக்களைக் கொண்டு மிதிப்பிப்பார்; பெரும்பாண். 236-42; 'ஈடுசால் போர்பழித் தெருமைப் போத்தினால், மாடுறத் தெழித்து ..... கூப்பிய செந்நெற்குப்பைகள் ..... குன்ற மொத்தவே' (சீவக. 59); 'கூனி ரும்பினிற் குறைத்தரி சும்மையிற் கொடுபோய், மேனி வந்துயர் வரையெனப் போர்பல வேய்ந்து, நீனி றக்கரும் பகட்டினாற் றெழித்துவை நீத்த, தூநி றத்தநெற் பண்டியிற் பற்பலர் தொகுப்பார்' (நைடத. நாட்டுப். 10.) விருந்துண : 'தமக்கென்றுலை யேற்றார்' (ஆசாரக்.)

(பி - ம்.) [1] 'குறிகளும் போற்றிக் கொள்வார்' [2] 'குன்றினெற்', 'குன்றினேர்' (௨௧)

67. கதிர்படு வயலி னுள்ள [1] கடிகமழ் பொழிலி னுள்ள
[2] முதிர்பல மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
[3] மதுவள மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்,

புறவு - முல்லை நிலம். பதிபடு - பதிக்கப்படுகிற. படிவளர் குழியினுள்ள - பூமியினுள்ளே வளர்கின்ற குழியிலுள்ளனவாகிய மஞ்சள், இஞ்சி, சேம்பு முதலியன. வண்டென - அந்த அந்த காலமறிந்து கிரகித்துக் கொள்ளும் வண்டைப்போல. வண்டின் தன்மை: சு. 7 : 38 ; கலி. ௩௦ : 1-4 ; கல். க : 1-4 ; திருவிளை. ௫௨ : 19.

(பி - ம்.) [1] 'சடிகமழ் புனலி னுள்ள' [2] 'முதிர்பயன்' [3] 'மதுவென மலரிற்', 'மதுவன மதனிற்', 'மதுமல ரதனிற்' (௨௨)

## வேறு

68. பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
[1] துருவ வுண்கணை யொண்பெடை யாமெனக்
கருதி யண்பொடு காமுற்று வைகலும்
மருத வேலியின் வைகின வண்டரோ.

உருவம் - அழகு. ஆண் வண்டு கண்ணைப் பெடையென்று எண்ணி வழிபடல்: 'வண்டு வழிபடரும் வாட்கண்ணாய்' (பழ. 4.) மருத வேலி : 350.

(பி - ம்.) [1] 'துருவ வேற்கணை', 'துருவ வொண்கணை' (௨௩)

69. வேளை வென்ற [1] முகத்தியர் வெம்முலை
ஆளை நின்று முனிந்திடு மங்கொர்பால்
பாளை தந்த மதுப்பருகிப்பரு
வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்.

வேளை வென்ற முகத்தியர் - காமக் கலக்கத்தைத் தருதலில் மன்மதனை வென்ற முகத்தின் அழகையுடையவர். வேளை வென்ற விழிச்சியர் என்ற பாடங்கொண்டு வேலை என்பது எதுகை நோக்கி வேளை யென்று திரிந்தது என்பாருமுளர். 'காமனேர் வயங்கு வாண் முகத்தியர்' (வி. பா. 14-ஆம் போர். 26.) ஆள் : சாதியொருமை ; உ. 12 : 25.

முகத்தியர், ஆள் என்பன வயல்களில் வேலை செய்துகொண்டிருக்கும் மள்ளர்களையும் அவர் மகளிரையும் குறிக்கும். முனிந்திடும் : வேலை செய்ய வொட்டாமல் காமநோயைக் கொடுக்கும் என்றபடி. பாளை தந்த மது : 54, உரை.

(பி - ம்.) [1] 'விழிச்சியர்' (௨௪)

70. ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருந்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட [1] மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

இந்நிலத்தே சில கார்கள் என்ன - பூமியிலே இறங்கி வருகிற சில மேகங்கள் போல. நீர் படிதலினாலும் நிறத்தினாலும் பெரிய வடிவினாலும் வெள்ளிய தாரைகளைச் சொரிதலினாலும் கார்கள் எருமைகளுக்கு உவமையாயின; 'முந்நீர் படிந்தணை மேகமும், நலங்கொள் மேதிகள் குழுந் தெரிக்கொணா' (பெரிய. வாயிலார். 3.) எருமை கன்றுள்ளிப் பால் சொரிதல்: 58, உரை. (உரு)

(பி - ம்.) 1 'வுண்முலை'

71. முட்டி லட்டின் முழுங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செந்நெலி னூறு வளர்க்குமே.

முட்டு இல் - விருந்தளிக்தற்கு எப்பொழுதும் குறைவில்லாத. அட்டில் - மடைப்பள்ளிகளில். படப்பை - தோட்டம் கூறு. பட்டம் - நீர் ஓடை; நந்தை. 72. கழுநீர் செந்நெல்லினூறுவளர்த்தல்: 'புரந்தர தாரு புதுவைச் சடையன், இருந்தவிய லூர்தெற்கு மேற்குப் - பாந்தபொன்னி, ஆற்றுநீ ரால்விளையு மப்பாற் கிழக்கரிசி, மாற்றுநீ ரால்விளைய மாம்' (பெருந் தொகை, 1131.) (உசு)

72. [1] சூட்டு டைத்தலைத் தூநிற வாரணம்
தாட்டு ணைக்குடை யத்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் [2] குருவிக் குழாமரோ.

வாரணம் - கோழி; கோழி குப்பையைக் கிளறுதல்: 'குப்பைக் கோழி' (குறுந். ருOரு); 'குப்பை கிளைப்போவாக் கோழி' (நாலடி. 341); 'குப்பை கிளைப்பறாக் கோழி' (பெருங். ரு. 14: 112.) (துணை [பி - ம்] - பேடும் சேவலும்.) குருவிகள் மின்மினியைக் கூட்டில் அடைத்தல்: 'எரியுமின் மினிமணி விளக்கி னின்றிணைக், குரீஇயினம் பெடையொடுங்

துயில்வ கூட்டினுள்' (சீ. 7 : 87.) (குரீ என்றது கடைக்குறையும் நீட்டும் வழி நீட்டலும்.)

(பி - ம்.) [1] 'கூட்டு டைத்துணை' [2] 'குரீஇக் குழாமரோ', 'குரீஇயின் குழாமெலாம்', 'குரீயின் குழாமரோ' (உஎ)

73. தோயும் வெண்டயிர் மத்தொலி [1] துள்ளல்போய்
[2] மாய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
[3] ஆயர் மங்கைய ரங்கை வருந்துவார்.

துள்ளல் - விட்டுவிட்டு ஒலித்தல். வாய் - பொருந்தியவாய். வாய்விட்டரற்ற: 'அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன' (நள. சு : 15). துள்ளல் மாயும்படி அரற்றவும். (தயிர் கடையும் தொழிலில் கைநொந்து வருந்து மென்று அரற்றவென்று கொள்க). வணங்கவும் - வளையவும்.

ஒப்பு: 'முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற, வல்லிநுண் மருங்கு நோவ வால்வளை வாய்விட் டார்ப்ப, மெல்விரற் காந்தள் சேப்ப வெண்டயிர் கடையு மோதை, கொல்புலி முழக்க மென்ன வயின்றொறுங் குளிறு மாதோ' (நைட. நாட்டுப். 15.)

(பி - ம்) [1] 'துள்ளவும்' [2] 'ஆய வெள்வளை' [3] 'ஆய மங்கையர்' (உஅ)

74. குற்ற பாகு [1] கொழிப்பன கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றி லார முகந்துதம் முன்றிலிற்
சிற்றில் [2] கோலிச் சிதறிய முத்தமே.

குற்ற பாகு - களிப்பாக்கினின்றும்; குற்ற - வெட்டிய. கொழிப்பன - கொழித்து வேறாக எடுக்கப்படுவன. கோணெறி - ஆடவர் இதயங்களைக் கொள்ளை கொள்ளும் வழியை. நுளைச்சியர் - நெய்தல் நிலப் பெண்டிர். கோணெறி கற்றிலாத என்றதனாலும் சிற்றில் கோலுதலாலும் பேதைப் பருவத்துச் சிறுமிகளென்று கொள்ளவேண்டும். [நெறி . . . . நுளைச்சியர் - விளாப்பாடாத பார்வையையுடைய பரதவச் சிறு பெண்கள்.] முற்றில் - சிறு சுளகுகளில்; சீவக. 1099, ந. ஆர - நிறைய. இது மருதமும் நெய்தலும் மயங்கியதைக் கூறியது.

முடிபு. கொழிப்பன முத்தமே.

(பி - ம்.) [1] 'கொழிப்பது', 'கொழிப்பவர்' [2] 'கோலச்' (உக)

75. துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
[1] வரிம ருப்பிணை வன்றலை யேற்றைவான்
உருமி டித்தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை யின்னுமே.

துருவை - செம்மறியாடு. இணை ஏற்றை - ஒன்றுக்கொன்று இணையான இரண்டு ஆண் ஆடுகள். [துருவை . . . . . ஏற்றை - தலையீற்று ஆடு ஈன்ற கிடாய்.] பிணை ஈன்ற ஏற்றை: 62. [வன்றலை - கடினமான தலை.] ஏற்றை தாக்குதல்: 'ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து' (குறள், 486.) இது முல்லையும் குறிஞ்சியும் மயங்கி வந்தது.

(பி - ம்.) [1] 'வரிம ருப்பின வன்றலை யேறுவான்' (௭௦)

76. தினைச்சி லம்புவ [1] தீஞ்சொ லிளங்கிளி
நனைச்சி லம்புவ நாகின வண்டிமிர்
[2] புனைச்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்
மனைச்சி லம்புவ மங்கல வள்ளையே.

தினை - தினைப்பயிர். சிலம்புவ - ஒலிப்பன. நனை - பூ வரும்பு. மலர்வதற்கு வண்டு ஒலிக்கின்றன. புனை - நீர்; பெருங். ௪. 7 : 75. மங்கல வள்ளை - உலக்கைப் பாட்டு; மலைபடு. 342; குறுந். அக : 1; கலி. ௪௨ : 7-8; சூளா. சுயம். 106; பெருங். ௩. 10 : 85, 2. 14 : 52; திருவள்ளுவ. 5; மங்கல வள்ளை - 'திருநியமங்கலமும் சோபனப் பாட்டும்' (ஞா உரை.)

(பி - ம்.) [1] 'செஞ்சொ' [2] 'புனற் சிலம்புவ' (௭௧)

77. கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் [1] குழூஉக்குரல்
இன்று ணைக்களி யன்ன மிரிக்குமே.

கன்று . . . . . நீக்கி: 'கறையடி மடப்பிடி கானத் தலறக், களிற்றுக் கன் றொழித்த வுவகையர்' (அகநா. ௮௩ : 3-4.) தொடர் - சங்கிலி. [வனவாரி - வனப் பரப்பு.] வாரி - யானையை அகப்படுத்தும் குழி; மலைபடு. 572. மள்ளர் - யானையை அகப்படுத்தும் வீரராகிய பாகர். இது குறிஞ்சியும் மருதமும் மயங்கியது.

(பி - ம்.) [1] 'குழூக்குரல்' (௭௨)

78. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
[1] புள்ளி கொள்வன பொன்விரி புன்னைகள்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.

வள்ளி - வள்ளிக் கிழங்கு. [மாணிக்கமும் கொள்வர்.] வள்ளிக்கு மாமணிகொள்ளல்; 38. துள்ளி - ஆமை; பிங்கல; விகாரம். ஆமை மாங்கனி யுண்ணல்: 'நெடுங்கான் மாஅத் தூழுறு வெண்பழம், கொடுந் தாள் யாமை பார்ப்பொடு கவரும்' (அகநா. மருதம் : 15-6.) மாங்கனி துள்ளி கொள்வன என்றலும் ஆம்; துள்ளி - துளி; தேன் துளித்தலை. பங்கயத்துப் பள்ளிகொள்வன.

(பி - ம்.) [1] 'வெள்ளி கொள்வன மென்மலர்ப் புன்னைகள்' (௭௮)

79. கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
[1] கன்று றக்குங் குரவை கடைசியர்
புன்றலைப்புனங் [2] காப்பிடை போதரச்
சென்றிசைக்கு நுளைச்சியர் செல்வழி.

கொன்றைக் குழல் - கொன்றைப் பழத்தைத் துருவித் துளைத்து ஊதுவது; 'கொன்றையந் தீங்குழல்' (சிலப். ஆய்ச்சியர்.) கொன்றை வேய்ங் குழல் - கொன்றைக் குழலும் வேய்ங்குழலும்; வேய் - மூங்கில்; உறக்கும் - உறங்கச்செய்யும்; முற்று. 'கொன்றை . . . . . கன்றுறக்கும் கடைசியர் குரவை - மருதநிலத்தில் இருக்கப்பட்ட பள்ளத்திகள் கைகோத்தாடுகிற குரவைக் கூத்தின் சத்தத்தைச் சரக்கொன்றைக் காயைப் புல்லாங் குழலா யூதுகின்ற இடையருடைய வாசலிலே கட்டியிருக்கிற பசுவின் கன்று கேட்டுப் பயந்து கூப்பிடும்' (ஓர் உரை.) காப்பு இடை போதர - காவல் கெடும்படி. நுளைச்சியர் - நெய்தல் நிலப்பெண்கள். இசையைக் கேட்டுக் கிளிகள் மேலும் மேலும் தம்மினமென்று புனத்துக்குள் வருகின்றமையினால் இசை புனக் காவலை அழிக்கின்றது என்றபடி; 'ஆயோ வெனுங்குர லந்தோ புனத்தை யழிக்கின்றதே' (திருவரங்கக் கோவை.) இது முல்லையும் மருதமும், குறிஞ்சியும் நெய்தலும் மயங்கியது.

(பி - ம்.) [1] 'கன்று ரக்கும்' [2] 'காப்புடை' (௭௯)

80. சேம்பு [1] காலிறச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன

காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.

கால் இற - அடி அற்றுப் போகும்படி. குளத்தூம்பு - குளத்தினுடைய மதகு. கால - கக்க. காம்பு கால் பொர - மூங்கில்களைக் காற்று அலைக்க. தேறல் - மூங்கிலிற் கட்டியிருந்த கூட்டினின்று வழியும் தேனை. தேனொழுக்கத்திற்குப் பாம்பு: 'பொதிக்க ணிருசுற் பூம்புறம் புதைஇ, மதிக்கண் மறைந்த மாசுண மான' (பெருங். ந. 50 : 35-6.) காலிறும்படி தூம்பு தேறலைக் கால அதனை வளை மேய்வன.

[பாம்பு நான்றெனப் பாய் பசுந்தேறலால் செங்கழுநீர்க் குளம் பெருகி மடை வழியோடிய தேனைச் சங்கின முண்டு முழங்கும்.]

(பி-ம்.) [1] 'கால்பொரச்' (௧௫)

81. பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி [1] விழைவன யாவையே.

வைகலும் - தினந்தோறும். விருந்து - விருந்தோம்பல்; 'மாதரா ரற்பினின்றன வறங்கள்' (104.) விழைவன - அவர்கள் விரும்புவன.

(பி-ம்.) [1] 'விளைவன' (௧௬)

82. பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்புபோழ்
[1] குறைக றித்திரள் [2] குப்பைப் பருப்பொடு
நிறைவெண் முத்தி னிறத்தரி சிக்குவை
உறைவ [3] கொட்டின வூட்டிடந் தோறெலாம்.

பிறை . . . . இரும்பு - அரிவாய் மணை; அரிவாளுமாம்; 'தேய்பிறையிரும்பு' (சீவக. 55); குப்பைப் பருப்பொடு - பருப்பின் குவியலோடு. உறைவ கொட்டின - கொட்டினவையாகக் கிடப்பன. ஊட்டிடம் - ஊட்டுப்புரை.

(பி-ம்.) [1] 'குறைந றைக்கறிக் குப்பை' [2] 'குப்பைப் பொருப்பொடு' [3] 'கொட்பின தூட்டிடந்', 'கோட்டமி லூட்டிடந்' (௧௭)

83. கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவளர் நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதம்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

கலம் - மரக் கலங்கள். கணக்கிலா நிதியத்தை. நன்மணியைப் பிலம் சுரக்கும்; பிலம் - சுரங்கம். குலம் ஒழுக்கம் சுரக்கும்: 'நல்லவை . . . . கெனின்' (நாலடி. 144.) (௭௮)

84. கூற்ற மில்லையோர் குற்றமி லாமையால்
சீற்ற மில்லைதஞ் [1]சிந்தையின் செம்மையால்
ஆற்ற லல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழிதக வில்லையே.

கூற்றம் - யமபயம்; கூற்றமில்லை: 'யாக்கை நிலையா தென்றறிந்து மறுமைக்கு வேண்டுவன செய்து கொண்டமையின் . . . . கூற்றத்தின் கொலைக்கு அஞ்சாமற் காவலுண்டா யிருக்கிற மதுரை' (மதுரைக். 632-3, உரை.) ஆற்றல் - செய்தல். சிந்தையின் செம்மை - மனத்தின் நடுவு நிலை. ஒப்பு : 98.

(பி - ம்.) [1] 'சிந்தைநற் செய்கையால்', 'சிந்தையின் செவ்வியால்', 'சிந்தையின் செய்கையால்' (௭௯)

85. [1]நெறிக டந்து பரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

நெறிகடந்து . . . . நீத்தமே: மற்றவை நெறியின் புறம்பில்லாத; 26. குறி - கரும்பும் தொய்யிலும் முதலாகிய அடையாளங்கள். வெறிய - வாசனை மணப்பன, வெறியையுடையன. இது நியமச்சிலேடை யணி.

(பி - ம்.) [1] 'நெறியி றந்து நடந்தன' (௮௦)

86. அகிலி டும்புகை யட்டி லிடும்புகை
[1]நகலி னாலை நறும்புகை [2]நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி [3]முயங்கின வெங்கணும்.

நகலின் - நன்கு விளங்குதலுடைய. ஆலை - கரும்பு ஆலைகளின். நான்மறை புகலும் வேள்வி. 'வேத வேள்வியை' (தே. திருஞா.) முயங்கின - கலந்தன.

(பி - ம்.) [1] 'நகையி னாலை', 'நகிலி டும்புகை யாலை', 'நகிலி னார', 'நகலி னார' [2] 'நாவலர்' [3] 'முழங்கின' (௮௧)

87. இயல்புடை பெயர்வன மயின்மணி யிழையின்
வெயில்புடை பெயர்வன [1] மிளிர்முலே குழலிற்
புயல்புடை பெயர்வன பொழிலவர் [2] விழியிற்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

இயல் - சாயல். மயில் பெண்களின் இயல்போல் புடைபெயர்வன. மணியிழையின் - இரத்தினுபரணத்தினுல். குழலுக்கு மேகம் உவமை. விழியின் - விழியைப்போல. கடி - வாசனே.

(பி - ம்.) [1] 'முலேயவர் குழல்போற்' [2] 'விழிபோற்' (சஉ)

88. இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் [1] துவரித முலர்வன குமுதம்
மடைபெய ரனமன மடநடை [2] யளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

இற - ஒடிய; எறி - அலேயெறியும். மறுக - கலங்க. துவரிதழ் - துவரூட்டிய இதழைப்போல; 175, 1074. நீர்மடையில் பெயர்கின்ற. அனமன - அன்னம் அன்ன. நடையையும் அளகத்தையுமுடைய கடைசியாது.

(பி - ம்.) [1] 'துவரித முனமலர்' [2] 'யிளகக்' (சஙு)

89. விதியினே நகுவன வயல்விழி பிடியின்
கதியினே நகுவன வவர்நடை கமலப்
பொதியினே நகுவன புணர்முலே [1] கலேவாண்
மதியினே நகுவன வனிதையர் வதனம்.

விதி - பிரமன். நகுவன - இகழ்ச்சி பண்ணுவன. 'அவர்களுடைய கண்கள் பிரம்மாவைப் பார்த்து, எங்களேப் போலக் கண்டவுடனே புருஷர் மயங்கும்படி நீ யுண்டாக்க மாட்டாயென்று இகழ்ச்சி பண்ணும்' (ஓர் உரை); [ஞானிகளே ஞானங்கெட மயக்கியும், தீர்க்காயு படைத்த பேரை மனவிகாரம் பண்ணி வாட்டியும் செய்கையால் விதியினே நகுவன.] கதி - நடை. பொதி - அரும்பு; 'பூப்பொதி யவிழ்ந்தன' (ஈ. 8 : 22); 'பொதியவிழ் வைகறை' (கலி. ருஉ : 22.) கமல அரும்பு முலேபோல் எப்பொழுதும் ஒரு படித்தாயில்லாமல் மலர்தலும் குவிதலு முடையது. மதியினே நகுதல், தேய்ந்து வளர்தலாலும் மறுவோடிருத்தலாலும்; 'திங்களுங்கள் . . . . . முகங் கண்டு நாணி முயல் மறுத்தீர், மருந்தொன்று நாடியன் றேவட மேரு வலங்கொள்வதே' (தஞ்சை. 9.)

(பி - ம்.) [1] 'கலேவாண்', 'கலேவாய்' (சச)

90. பகலினொ டிகலுவ படர்மணி மடவார்
நகிலினொ டிகலுவ நளிவள ரினநீர்
துகிலினொ டிகலுவ [1] சுதைபுரை நுரைகார்
முகிலினொ டிகலுவ கடிமண முரசம். ,

பகல் - சூரியன். நகில் - தனங்கள். நளி - குளிர்ச்சி. சுதை - சுண்ணம்பு. துகிலுக்கு நுரை. 'மணி நுரைக்கொடி' 36 (பி-ம்.); 'வெண்டுகில், அரைய தாகவும் ஆடைகாணுது . . . . . குடைந்த, நுரைகை யரிக்குமோர் நுடங்கிடை' (பெருங். க. 40: 148-51.) முரசுக்கு முகில்: திருந். உளூ, ஒப்புமைப்.

(பி - ம்.) [1] 'சுதைபொழி மலைகார்' (சுஙு)

91. காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன [1] பொலன்வரை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம்.

பொழிலுக்கு மேகம்: 'தடங்கார் தருபெருவான் பொழில்' (சிந். 31.) நெற் போர்க்கு மலை: மலைபடு. 461; சீவக. 59; கந்த. நாடு. 22. இமையவருலகத்தொடு நிகர்வது இரவு பகலென்னும் வேறுபாடின்மை பற்றி; சீவக. 135. அணைசூழ் நீர் - குளம் முதலிய நீர் நிலைகள்.

(பி - ம்.) [1] 'புணர்மலை', 'புணர்முலை' (சுசு)

92. தென்மலை யல்லன [1] நிறமுறு தாளம்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்.

'யாவரும் தேவாமிர்தம் போல் வசனிப்பார்' என்றபடி. மலை - தொகுதி. பொன்மலை - மேருமலை. புளினம் - மணற்குன்று. அல்லன: 145.

(பி - ம்.) [1] 'நிரைவரு' (சுஎ)

93. பந்தினை யிளையவர் பயில்இட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வன்மாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

இளையவர் - மகளிர். இளையவர் பந்தாடல்: 151, 155. பந்தாடுமிடம் சந்தனவனம். கலை - வில்வித்தை முதலியன. பதுமினி சாதிப் பெண்களின் உடல் சண்பகப்பூ மணமுடையது. பெண்கள் சந்தனச் சோலையில் பந்தாடுதல்: 'சந்தனச் சோலைப் பந்தாடுகின்றார்' (சிற். 107.) நறை விரி புறவம் - முல்லை மணம் வீசுகின்ற முல்லை நிலம். சிறந்த ஆடவர் மேனி முல்லை மலரின் மணமுடையது; 'மணந்தனன் மன்னெடுந் தோளே, இன்று முல்லை முகைநா றும்மே' (குறுந். ௬௬௩); 'திருந்திழைகண், மான்மறிக் குன் றிருமேனி மலர்முல்லைப் புறவமே' (சிதம்பரச்செய். 57.) (௯௮)

94. கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிக ளவர்பயி னடமே
கேகய நவில்வன கிளரிள வளையின்
நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம்.

இஃது எதிர் மறையணி. கிளவிகளை நவில்வன. வளையின் நாகு - சங்கின் பெண். கேகயம் - மயில்கள். நகைபுரை தரளம் - பெண்களின் பல் வரிசையை ஒத்த முத்துக்கள். (௯௯)

95. பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையன வுழுதொழில் புரியும்
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ்.

பழையர் - கள் விற்பவர்; 149. மழவர் - இளைஞர். கிளை - கிளை நரம்பு: ஐந்து நரம்பு; சிலப். அ: 33-4, உரை. (௬0)

96. கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன [1]வுயிருறு மமுதம்
காதைகள் சொரிவன [2]செவிநுகர் கவிகள்.

பாதை - வழி. என்றது தரைவழி கடல் வழிகளை; 'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும், காலின் வந்த கருங்கறி மூடையும்' (பட்டினப். 185-6); 'அரும் பொரு டரூஉம் விருந்திற் றேஎம், ஒருங்குதொக் கன்ன உடைப்பெரும் பண்டம், கலத்தினுங் காலினுந் தருவன ரீட்ட' (சிலப்.

உ: 5-7.) அமுதம் - நீர்; குறள், 11. காதை - பாட்டு; சிலப். மணி: முகவுரை. கனிகள் (பி - ம்.) - சாரம்; சீவக. 1985, உரை.

(பி - ம்.) [1] 'வுறையுறு மமிர்தம்' [2] 'செவிநுகர் கனிகள்', 'செவியுறு கனிகள்' (௯௬)

## வேறு

97. இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோல்
தடங்கொள் [1] சோலைவாய் மலர்கொய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடும்
தொடர்ந்து [2] போவன தோகை மஞ்ஞையே.

இடம் - பெருமை; 330; 'இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்' (நாலடி. ௧௧௬.)

முடிபு: இளைஞர் சிந்தைபோல் மடந்தைமாரொடும் தொடர்ந்து போவன மஞ்ஞை.

(பி - ம்.) [1] 'சோலையின் குர்பெய்', 'சோலைவாய் மலர்செய்', 'சோலைவாய் மலர்பெய்' [2] 'செல்வன தோகை மஞ்ஞைகள்' (௯௭)

98. வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை [1] யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

வண்மை . . . . . வறுமையின்மையால்: 'யாதுங் கொள்வாரி லாமைக் கொடுப்பார்களு மில்லை' (179.) வெண்மை - அறியாமை; 'வெள்ளி யையாதல் விளம்பினை', 'வெள்ளை மனத்தவர்' (452, 784); 'வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை, யுடையம்யா மென்னுஞ் செருக்கு' (குறள், 844); 'வெள்ளைக் கோட்டி' (சிலப்.); 'வெளிறிலாக் கேள்வியான்' (சீவக. 200; சூளா. மந்திர. 65); 'விளையு மாற்றநின் திருவடி வினுமிக வெள்ளையா கியது' (வி - பா. உலூக. 4); 'வெளிறெறி கேள்வி' (கூர்ம. சந்திர. 109.)

(பி . ம்.) [1] 'யில்லையோர்' (௯௮)

99. எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையும்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தழுதின் பண்டியும்
தள்ளு நீர்மையிற் [1] றலைம யங்குமே.

கொள்ளை - மிகுதி. அளத்து அமுது - உப்பு. தள்ளுதல் - தம் இடத்தினின்றும் நீங்குதல். தலைமயங்கும் - கலக்கும்.

(பி - ம்.) [1] 'தரைம யங்குமே' (௯௪)

100. உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்
பெயரும் [1] பல்கதிப் பிறக்கு மாறுபோல்
அயிருந் தேனுமின் பாகு மாயருர்த்
தயிரும் வேரியுந் தலைம யங்குமே.

வினையால் பிறப்பில் தடுமாறுதல்: 42. உயரும் சார்வு - ஞானம்; உயர்கதியுமாம். அயிர் - சருக்கரை. வேரி - கள்.
இது திணைமயக்கம்.

(பி - ம்.) [1] 'செல்கதிப்' (௯௫)

101. கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் தெதிர்ந்த [1] தாமெனச்
சாறும் வேள்வியுந் தலைம யங்குமே.

கூறு - இசைக்கின்ற; 'மொழிந்தன பல்லியம்' (262); 'புகன்ற தீங்குழல்' (சீவக. 1940.) சாறு - விழவு. வேள்வி - திருமணம். சாறும் வேள்வியும்: 'வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்து' (சிலப். உஅ : 232); 'விழவொலியும் வேள்வொலியு மானான் கண்டாய்' (தே. நா. மழபாடி).

(பி - ம்.) [1] 'வாமெனச்' (௯௬)

102. மூக்கிற் றூக்குறு [1] மூரி நந்துநேர்
தாக்கிற் றூக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கிற் றூக்குறும் விளியு மன்னர்தம்
வாக்கிற் றூக்குறு [2] மொலியின் மாயுமே.

மூரிநந்து - மூக்கினிடத்தே ஊதப்படும் பலமுள்ள சங்கின் ஓசை. பறை - பேரிகையோசை. தண்ணுமை - மத்தளம். மள்ளர் - வீரர். மாயும் - அழியும். எம் முழக்கமும் வீரர் ஆர்ப்பொலியினால் அழியும்.

(பி - ம்.) [1] 'மூரிந்த கோதைநேர்' [2] 'மொலியை மாறுமே', 'மொலியு மாறுமே' (௯௭)

103. தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலே [1] வாயமு தொழுக்கு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வால்நி லாவுறக் [2] குவிதன் மானுமே.

தாலி ஐம்படை - காத்தற் கடவுளாகிய திருமாலுடைய ஐந்து ஆயுதங்கள் போலப் பொன்னாற் செய்யப்பட்டுக் காவலாகக் குழந்தைகளின் கழுத்திற் பூட்டப்படுவதோர் ஆபரண விசேடம்; அகநா. ருச; புறநா. எஎ; மணி. ஈ. 138, எ : 56; பெரியாழ்திரு. 1. 3 : 5; கலிங்கத். அவதார. 9; திருவிளை. 39 : 25. கைக்குப் பங்கயமும் பாலுக்கு நிலவும் உவமை.

(பி - ம்.) [1] 'யமிர் தொழுகு' [2] 'குவிவ மானுமே' (ருஅ)

104. பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

பொற்பின் - அழகைப்போல். பொலிவு - நற்குண நற்செய்கைகள்; குடிப் பெருமையுமாம்; 'பொற்பே பொலிவு' (தொல். உரி. சூ. 37.) 'நின்ற சொல்லி னீடுதோறினியர்' (நற். க.) நிற்பின் - 'சத்திய வசனங்களைப்போல்' (ஓர் உரை); அற்பு - அன்பு. அற்பினின்றன வறங்கள்: 'அறத்திற்கே யன்பு சார்பென்ப' (குறள், 76); 'அறங்கள் - இல்லற தருமம்' (ஓர் உரை.) கற்பின் ..... மாரி: 'வறனோடின் வையத்து வான்தரும் கற்பினாள்' (கலி. கசு : 20); 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை' (குறள். 55); 'வானம் பொய் .... நாடு' (சிலப். கடு : 145-7); 'வான்றரு கற்பின் மனையுறை மகளிர்', 'ஆயிழை .... மழையு நின் மொழியது' (மணி. கசு : 77, 22 : 68-9.) காலமாரி - காலத்திற் பெய்யும் மழைகள். (ருகூ)

105. சோலே மாநிலந் துருவி யாவரே
வேலே கண்டுதா மீள வல்லவர்
சேர்லும் வார்புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லேயே.

நிலம் - கோசல நாடு. வேலே - எல்லே. கால் - வாய்க்கால், பாதம்; சிலேடை. சரயு நதியின் நீர் பாயாத இடமும் இந்நாட்டிலுண்டு. சரயு பல

காலி ேைடியும் காணுதைை யாவர் இருகாலின் நடந்து காண்பார் என்றபடி. (சுo)

106. [1]வீடு சேருநீர் வேலே கான்மடுத்
தூடு பேரினு முலேவி லாநலம்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம்.

வீடு சேரும் நீர் - கோசல நாட்டிற் பாய்ந்து எஞ்சியதாக விடுதலே யுடைய நீர். கால் மடுத்து - காற்றெடு கலந்து. வீடு . . . . உலே விலா நலம் கூடு - 'உகாந்த காலம் வந்து உலகமெல்லாம் அழிந்து போனாலும் அழியாத வளப்பங்களே யுடைய' (ஓர் உரை.)

(பி - ம்.) [1] 'வீடு சேர' (சுக)

நாட்டுப்படலம் முற்றும்.

---

# 3. நகரப் படலம்

அயோத்தி நகரத்தின் வருணனையைக் கூறும் பகுதி நகரப் படலம் எனப்பெறும்.

வேறு

மேலுலகினும் அயோத்தி சிறந்தது

107. [1]செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
இவ்வுல கத்தோர் யாவருந் தவஞ்செய்
தேறுவா னுதரிக் கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
[2]புரிகின்ற தயோத்திமா நகரம்.

செவ்விய . . . . . . தீஞ்சொல் : 'செவ்விய தீவிய சொல்லி' (கலி. கக: 1.) [திவ்விய மதுரம் (பி-ம்.) - அற்புதரஸம்.] கவிஞர் - இராமாயணம் பாடிய சங்கப்புலவர் முதலியோர் ; சங்கத்தார் ராமாயணத்தை நினைந்து கூறியது இது. வடநூன் முனிவர் : பாயிரம், 13, குறிப். அருத்தி - ஆசை. இச்செய்யுளின் கருத்து 'மாண்டுபிறக் குந்துயர்போய் வைகுந்தம் புக்கவரும், மீண்டுதொழக் காதலிக்கும் வேங்கடமே' (திருவேங்கட மாலை, 10) என்றதை ஒத்தது. சுவர்க்க லோகத்தினும் மேலான போகங்களையுடையது அயோத்தி என்பது கருத்து. 'புகழ்ந்ததும் புரிகின்றதும் அயோத்திமாநகரம்' என்க.

(பி-ம்.) [1] 'திவ்விய மதுரம்' [2] 'புரிகின்ற வயோத்தி' (சு)

## அயோத்திக்கு உவமைகள்

108. நிலமகண் முகமோ [1]திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல் நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ வுயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் [2]மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ [3]வானோர்
உலகின்மே லுலகோ வூழியி னிறுதி
யுறையுளோ வாதென வுரைப்பாம்.

உயிரின் இருக்கையோ - நிலமகளின் உயிர் நிலையான மருமஸ்தானமோ ; 'ஆன்மாக்கள் எல்லாம் கூடியிருக்கின்ற சத்தியலோகமோ' (ஓர் உரை.) 'மாயோன்மார்பில் மணி' (உ. 2 : 28.) [உலகின் மேலுலகு - வைகுண்டம். ஊழியின் இறுதி உறையுள் - பரமபதம்.] ஊழியின் . . . . . யுள் - 'சங்கார காலத்திலே யெல்லாரும் போய்ச் சேர்ந்திருக்கிற சிவலோகம்' (ஓர் உரை.) 'ஊழி வாழ் திருநகர்'. (உ. 9 : 38.) இச்செய்யுளில் திருமாலின் தேவியாரான திருமகளையும், பூமியையும் கூறினர்.

(பி-ம்.) [1] 'திலதமோ' [2] 'மார்பத்து மாலைகள்', 'மார்பினன் மணிக்கலம்' [3] 'மலரோன்' (உ)

## சூரிய சந்திரர் இமையாமல் திரியும் காரணம்

109. உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முதலோர்
கண்டிலா நகரது காண்பான்

அமைப்பருங் [1]காத லதுபிடித் துந்த
வந்தரஞ் சந்திரா தித்தர்
இமைப்பிலர் [2]திரிவ ரதுவலா லிதனுக்
கியம்பலா [3]மேதுவே றியாதோ.

இருவர் - திருமகளும் நிலமகளும். கமை — க்ஷமை - பொறுமை. தற்குறிப்பேற்றம்.

(பி - ம்.) [1] ' காதன் முன்பிடித் ' [2] ' திரிவ ரிதுவலா ' [3] ' ஏதுமற் றியாதோ ', ' முவமைமற் றியாதோ ' (௯)

அயோத்தியைப் பிரம்மா படைத்த சிறப்பு

110. அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு
மளகையு மென்றிவை [1]யயனூர்
பயிலுற வுற்ற [2]படிபெரும் பாலு
மிப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதற் றெய்வத் தச்சருந் தத்த
மனத்தொழி லுணினர் மறந்தார்
புயலுறு குடுமி நெடுநிலை [3]மாடத்
தந்நகர் புகலுமா றெவனோ.

குலிசம் - வச்சிராயுதம். நகர் - அமராவதி. அளகை - குபேரனுடைய நகர். ' அயனூர் நகர் படைப்பான் பயிலுறவுற்றபடி ' என்று இயைக்க. ' மயன் - தெய்வத்தச்சன் ' (சிலப். உ : 12, அடியார்.) மயனை அசுரத்தச்சன் என்பாருமுளர் (வி. பா. இராச. 5.) மயன் முதலினோர் மனத்திலே நினைத்துச் சிருஷ்டிக்கிறவர்கள் (வி. பா. இராச. 7, 8.) நெடுநிலை மாடம், 32.

(பி - ம்.) [1] ' யயனூற் ' [2] ' படிபெரும் பான்மை ' [3] ' மாடத் திருநகர் ' ' மாடப் பொன்னகர் ' (௰)

இது போகபுரி

111. புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமீ தருமறைப் [1]பொருளே
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடு வளர்த்தார்

எண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ்
வேழுல காளிட மென்றால்
ஒண்ணுமோ வதனின் வேறொரு போக
முறைவிட முண்டெனை வுணர்த்தல்.

புண்ணியம் . . . . . துறக்கம் : ' அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண் மார், சிறந்தோ ருலகம் படருநர் போல ' (பரி. கக : 10-11) ; ' நோற்றோர் மன்ற . . . . ஆண்டு வாழ்வோரே', ' ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர், உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தனன் ' (புறநா. உசு : 16-8, களச : 19-20) ; ' ஈண்டுச் செய்வினை யாண்டு நுகர்ந்திருத்தல் ' (மணி. கச : 38.) குணத்தினவன் : உ. 11 : 37. தவத்தையும் அறத்தையும் நிலை நிறுத்தி னர் இராமபிரான். ஏழுலகு - ஏழுதீவு. இனிதிருந்து ஆளிடம் : 112.

(பி - ம்.) [1] ' பொருளேல் ' (இ)

## பொன்னகரிலும் சிறந்தது இது

112. [1]தங்குபே ரருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் [2]புலங்களைந் தவர்க்கும்
பொங்குமா தவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிட மான
செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந்
திருவின்வீற் [3]றிருந்தன னென்றால்
அங்கண்மா ஞாலத் தந்நக ரொக்கும்
[4]பொன்னக ரமரர்நாட் டியாதோ.

அருள், அறம் : 183 ; ' அருளொடு புணர்ந்த அகற்சி ' (தொல். புறத். 21, ந.) திருவின் வீற்றிருந்தன னென்றால் : ' அனையதே பட்டதென்றால் : என்றால் ஒரு வார்த்தைப்பாடு ' (சீவக. 1053. ந.)

(பி - ம்.) [1] ' தங்குமா பொருளுந் ' [2] ' புலங்களைத் தவிர்க்கும் ' [3] ' றிருந்தமை தெரிந்தால் ' [4] ' நன்னக ' (சு

## தனக்கு உவமை வேறில்லாதது

113. அரசெலா மவண வணியெலா மவண
வரும்பெறன் மணியெலா மவண
[1]புரசைமா களிறும் புரவியுந் தேரும்
பூதலத்தி யாவையு மவண

*விரசுவார் முனிவர் விண்ணவ ரியக்கர்*
*விஞ்சையர் முதலினோ [2]ரெவரும்*
*உரைசெய்வா ரானு ரானபோ ததனுக்*
*குவமைதா னரிதரோ [3]வுளதோ.*

*புரசை - யானைக் கழுத்திடு கயிறு. விரசுவார் . . . . . உரை செய்வார் - அங்கேவந்து கலப்பாராய் உரை செய்வார். அரோ : 'கொல்' என்பதுபோல ஐயப்பொருள் தரும் ஓர் இடைச்சொல்,* 1127.

(பி - ம்.) [1] 'புரசைமால்' [2] 'ரென்குல், உரைசெய்வன் யானே யான ததனுக்' [3] 'வுளவே' (எ)

## மதில் வருணனை

**114.** *நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி*
*நனிதவ வுயர்ந்தன பணிதோய்*
*மால்வரைக் குலத்தின் யாவையு மில்லை*
*யாதலா லுவமைமற் றில்லை*
[1] *நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடு பழகி*
*நுணங்கிய [2] நூலவ ருணர்வே*
[3] *போல்வரைத் தல்லா லுயர்வினோ டுயர்ந்த*
*தென்னலாம் பொன்மதி லினையே.*

*நால் வகைச் சதுரம் : சு.* 8 : 16. *வரைக்குலத்தில், நாட்டப் பெற்று உயர்ந்தன இல்லை. நனிதவ : ஒரு பொருட் பன்மொழி. நூல்வரைத்து - எல்லைக்கடங்கியது. நூல் . . . . பழகி : அறிவுக்கும் மதிலுக்கும் சிலேடை ; நூல் வரை - நூலின் வரம்பு, பிடித்த நூலின் எல்லை ;* நெடுநல். 78, ந. *பயம் - அற முதலிய நாற்பொருட் பயன், அகழி நீர். நுணங்கிய நூலவர் : 'நுணங்கிய கேள்வியர்'* (குறள், 419.) *'நூலளவே யாகுமா நுண்ணறிவு'* (மூதுரை); *உயர்வினோடுயர்ந்தது - தன் உயரத்துக்குத் தானே ஒத்தது'* (ஓர் உரை.)

(பி - ம்.) [1] 'நூல்வகைத்' [2] 'நவலரு முணர்வே' [3] 'போல்வகைத்' (அ)

**115.** மேவரு முணர்வு முடிவிலா மையினுல்
வேதமு மொக்கும்விண் புகலாற்
றேவரு மொக்கு முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலாற்

காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கும்
[1] யாவருந் தன்னை யெய்துதற் கரிய
தன்மையா லீசனை யொக்கும்.

அறிவினால் முடிவுகாண இயலாத தன்மையால் வேதம் உவமை. வேதம் நான்கு, நாற்புற மதிலும் நான்கு; 'வேத நான்கு மன்ன வாயிலே' (128.) பொறி - ஐம்பொறிகள், ஆயுதங்கள்; சிலைகை. மதிலின்மேல் பொறிகள்: சிலப். கரு: 207 - 218; பெருங். க. 3: 17-38; சீவக. 105; பு. வெ. 112; திருவிளை. நகரப். 24-9. கலையூர்கன்னி - துர்க்கை; கிராமத்துக்குத் தீங்கு வாராமல் காவல் புரிபவள். சூலம் - இடிதாங்கி; சூலமென்னும் ஆயுதம்; 142. ஈசன் - சிவன்; 'காலாக்கினிருத்திரன்' (ஓர் உரை.)

(பி - ம்.) [1] 'யாவரு மொக்கும் பெருமையா லெய்தற் கருமையா லீசனை', 'யாவையு மொக்கும் பெருமை' (கூ)

116. பஞ்சிவான் மதியை [1]யூட்டிய வனைய
படருகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோன் மருங்குற் குரும்பைபோற் கொங்கை
[2] வயங்குவேய் வைத்தமென் பணைத்தோள்
அஞ்சொலார் பயிலு மயோத்திமா நகரி
னழகுடைத் [3] தன்றெனை வறிவான்
இஞ்சிவா னோங்கி யிமையவ ருலகங்
காணிய வெழுந்தெதாத் துளதே.

பஞ்சி . . . கால் - செம்பஞ்சிக்குழம்பாலே ஊட்டப்பட்ட பூர்ண சந்திரர்களை வரிசையாய்ப் பதித்தது போன்ற நகங்களோடு கூடிய தாமரையனைய பாதங்கள். தோளையுமுடைய அஞ்சொலார். வேய் - மூங்கில். உடைத்தெனை, அன்றெனை அறிவான். இஞ்சி - மதில்.

(பி - ம்.) [1] 'ஊட்டிய தனைய' [2] 'வாங்குவேய்' [3] 'தோவெனை' (௧0)

117. கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
[1] நூலிடை நடக்குஞ் செவ்வையின் யார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்

வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு [2] நலத்திற்
[3] சாலுடை யுயர்விற் சக்கர நடத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே.

கோலிடை யுலகம் அளத்தலின் : மதிலுக்குக் கூறுங்கால் உலகத்தவர் கோலினால் தன்னை அளத்தலினால். மனு - தெய்வத் தச்சருள் ஒருவன். நூலிடை நடத்தல் - சிற்ப சாஸ்திரப்படி ஒழுங்குபடக் கட்டியிருத்தல். சக்கரம் - ஓர் ஆயுதம். சூழ்ச்சி - நாற்புறமும் சூழ்ந்திருத்தல். சாலுடையுயர்வு - உன்னதமான உயர்ச்சி. அரசருக்குக் கூறுங்கால், கோல் - செங்கோல். மனுநூலிடை நடத்தல் - மனுதருமத்தின்படி ஒழுகல். பயிற்றல் - தெரியக் காட்டுதல். சூழ்ச்சி - ஆலோசனை. சக்கரம் - ஆணையாகிய சக்கரம்.

(பி - ம்.) [1] 'நூனெறி' [2] 'வலத்திற்' [3] 'சால்புடை' (கக)

118\. சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
சக்கரந் [1] தோமர முலக்கை
கனத்திடை யுருமில் வெருவருங் கவண்க
லென்றிவை கணிப்பில [2] கொதுகி
னினத்தையு முவணத் திறையையு மியங்கு
காலையு [3] மிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றான்
மற்றினி யுணர்த்துவ தெவனோ.

சினத்து அயில் - உடையவன் பண்பு உடைமை மேல் ஏற்றப்பட்டது. கனத்திடை உரும் - மேகத்தில் தோன்றும் இடி. இயங்கு கால் - சஞ்சரிக்கும் காற்று. மதில் மேற் பொறிகள் : 115, குறிப்.

(பி - ம்.) [1] 'தோமரம் வலையம்' [2] 'வலங்கி, னினத்தையு முவணர்க் கிறையையு' [3] 'மிதமலா' (கஉ)

119\. பூணினும் புகழே யமையுமென் றினைய
பொற்பினின் றுயிர்நனி புரக்கும்
யாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு
மிரவிதன் குலமுத லிருபர்

*சேணையுங் கடந்து திசையையுங் கடந்து*
*திகிரியுஞ் செந்தனிக் கோலும்*
*[1]ஆணையுங் காக்கு மாயினு நகருக்*
*கணியென வியற்றிய தன்றே.*

பூணினும் புகழ் சிறந்தது. யாணர் - புதிய வருவாயையுடைய. சேண் - தேவருலகம்; முருகு. 12, உரை. மதில் நகருக்கு அழகு: 'அகழு மதிலு மலங்கார நீர்மைய வென்பது போதர அணியில்லை யென்றார்' (சிந். 181, பேர்.)

(பி - ம்.) [1] 'ஆணையுங் கடங்கு மாயினை நகருக்', 'ஆணையு நடத்து மாயினை நகருக்' (கக.)

அகழியின் வருணனை

120. *அன்னமா மதிலுக் காழிமால் வரையை*
*யலைகடல் சூழ்ந்தன வகழி*
*பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்ப்*
*புன்கவி யெனத்தெளி வின்றிக்*
*கன்னிய ரல்குற் றடமென யார்க்கும்*
*படிவருங் [1]காப்பின தாகி*
*நன்னெறி விலக்கும் [2]பொறியென [3]வெறியுங்*
*கராத்தது நவிலலுற் றதுநாம்.*

ஆழிமால்வரை - சக்கரவாளகிரி; 'நேமிமால்வரை மதிலாக' (188.) அலைகடல் - பெரும்புறக்கடல். விலைமாதர் மனம் ஆழ்ந்திருக்கும். புன்கவி தெளிவின்மைக்கு: 'கல்லார் கவிபோற் கலங்கி' (திருவிளை. 8 : 22.) கன்னியர் காப்பு: 'கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே' (சீவக. 98.) அகழிற்கரா: 'கோள்வாய் முதலைய குண்டகழி நீராக' (பு. வெ. 110.)

(பி - ம்.) [1] 'கற்பின தாகி' [2] 'பொறியினை யெறியும்' [3] 'வெறியு நாரமதனையலுற்', 'வெறியு நகரது' (கச)

வேறு

121. **ஏகு கின்ற தங்க ணங்க ளோடு மெல்லை [1]காண்கிலா**
**நாக மொன்ற கன்கி டங்கை நாம வேலை யாமெனு**
**மேக மொண்டு கொண் டெழுந்து விண்டோ டர்ந்த குன்றமென்**
**றூக நொந்து நின்று தாரை யம்ம திற்கண் வீசுமே.**

கணங்கள் - மேகக் கூட்டங்கள். நாகம் - பாதாள உலகம்; எல்லை காண் கிலாக் கிடங்கு. நாம வேலை - அச்சம் தரும் கடல். மதிலுக்கு மலை: 'கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி' (பதிற். கசு : 1); 'வரையுறழ் நீண்மதில்' (கலி. கஉ : 12.)

முடிபு : மேகம் தங்கணங்களோடும் மொண்டு கொண்டெழுந்து மதிற் கண் தாரை வீசும்.

(பி - ம்.) [1] 'காண்கலா, நாக மென்ற தன்கி டங்கை', 'காணலா' (கரு)

122. அந்த மாம திற்பு றத்த கத்தெ ழுந்த [1] லர்ந்துநீள்
கந்த நாறு பங்க யத்த கான மான மாதரார்
முந்து வாண்மு கங்க ளுக்கு டைந்து போன [2]மொய்ம்பெலாம்
வந்து போர்வி ளைக்க மாம தில்வ [3]ளைந்த தொக்குமே.

பங்கயத்தகானம் - தாமரைக் காடு. மானம் - பெருமையுள்ள. போன மொய்ம்பு - இழந்த வலிமை. போர் விளைத்தல் மாதரார் முகங்களாகிய தம் பகையை வெல்லும் பொருட்டு.

(பி - ம்.) [1] 'லர்ந்த செங்' [2] 'மொய்த்தெலாம்', 'மொய்ம்பினுல்'
[3] 'ளைத்தன் மானுமே', 'ளைந்த போன்றவே' (கசு)

123. சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த வாரை சுற்று முற்று பாரெலாம்
போழ்ந்த மாகி டங்கி டைக்கி டந்து பொங்கி டங்கர்மா
தாழ்ந்த வங்க வாரி யிற்ற [1]டுக்கொ ணுமை தத்தின்வீழ்ந்
தாழ்ந்த யானை [2] மீள்கி லாத ழுந்து கின்ற போன்றவே.

நாஞ்சில் - ஏப்புழை; 'கனக நாஞ்சிற் கடி மதில்' (சூ. 1 : 90); (நாஞ்சில் - கோட்டை, ஆரை - பிள்ளைக்கோட்டை.) பார் - பாறை; பாரெலாம் போழ்ந்த கிடங்கு : மதுரைக். 730; மலைபடு. 91; அகநா. 79 : 13; புறநா. கஎ : 5. இடங்கர்மா - முதலை; 'முண்ட கத்துறை சேர்ந்த முதலைமா' (சூளா. நாட்டு. 22.) திர்யக் என்பதுபோல மா என்பது சாதாரண விலங்குகட்கே யன்றி நீர்வாழுயிர்கட்கும் பறவைகட்கும் வழங்கும் பெயர்; (உ - ம்) அசுணமா; 'முதலையுஞ்சுறவும். . . . . மீனெனப்படுவ வல்லது மாவெனப்படா'. (சிலப். பதி. 1 - 2, அடியார்.) வங்கவாரி - கடல். முதலைக்கு யானை : 125.

(பி - ம்.) [1] 'டுப்பொ ணுமை தத்தினுல்' [2] 'மீதெ ழாத' (கஎ)

124. ஈரும் வாளின் [1]வால்வி ரித்தெ யிற்றி ளம்பி றைக்குலம்
பேர மின்னி [2]வாய்வி ரித்தெ ரிந்த கட்பி றங்குநீச்
சோர வொன்றை யொன்று முன்றொ டர்ந்து சீறி டங்கர்மா
[3]போரு கந்து சீறு கின்ற போர ரக்கர் போலுமே.

முதலை வாலுக்கு ஈர்வாள். முதலைக்கு அரக்கர்.

(பி - ம்.) [1] 'வால்வி ரித்' [2] 'நாவி ரித்', 'நாநி மிர்த்' [3] 'போரில் வந்து', 'போரு வந்து' (கஅ)

125. ஆறு மன்னம் வெண்கு டைக்கு லங்க ளா[1]வ ருங்கரா
கோளெ லாமு லாவு கின்ற குன்ற மன்ன யானையாத்
தாறு லாவு பங்க யத்த ரங்க முந்து ரங்கமா
வாளும் வேலு [2]மீன மாக மன்னர் சேனை மானுமே.

அன்னத்துக்கு வெண்குடை. கரா - முதலை; அகப்பட்ட பிராணிகளை இழுத்துக் கொள்வது. முதலைக்கு யானை; குதிரைக்கு அலை: ரு : 11 : 8. குன்றம் - மேருமலை. வாளைக்கு வாள்: 'வாளை பிறழுங் கயங்கடுப்ப. . . . வெள்வாள் விதிர்த்து' (பு. வெ. 147.) கெண்டைக்கு வேல்: 'வேலன்ன வொண்கயல்', 'வயற்கெண்டையின் வேல்பிறழினும்' (புறநா. உ௪௬ : 6, உ௮௭ : 4.)

(பி - ம்.) [1] 'யருங்கராக்' [2] 'மீன தாக' (கக)

126. [1]விளிம்பு சுற்று முற்று வித்து வெள்ளி கட்டி யுள்ளுற
பளிங்கு பொற்[2]ற கட்ட கட்ட டுத்து றப்ப டுத்தலிற்
றளிந்த கற்ற லத்தொ டச்ச லத்தி னைத்த னித்துறத்
தெளிந்து ணர்த்து கிற்று மென்ற றேவ ராலு மரிவதே.

விளிம்பு. . . . கட்டி : க. 6 : 5. விளிம்பு. . . . படுத்தலின் - 'வெள்ளியை யுருக்கி (த்திண்ணையாக) இருபுறமும் சுற்றி வரக் கட்டி நடுவே சந்து சந்துக்கும் பொன் தகட்டாலே குந்தள மிழைத்துப் பளிங்குக் கற்களைத் தளவரிசையாய்ப் பதிப்பித்திருக்கிற படியினாலே' (ஓர் உரை.) தளிந்த - குளிர்ந்த; 'தளியார்சலதி' (சேதுபு. சேதுவந். 30); தெளிவுள்ள: 'ஆதிப்பிரானைத் தளிந்தவர்க்கல்லது' (திருமந்திரம். 527.) பளிங்கும் புனலும் : 949, 1055. 'பளிங்கு செற்றிக் குயிற்றிய பாயொளி, விளிம்பும் வெள்ளமு மெய்தெரி யாது' (கி. 2 : 154); 'பளிங்கினுல்

விளங்குகின்ற, மாரனும் மருளச் செய்த மாளிகை...., நீரினுலியன்ற வென்ன நிழலெழுகின்ற' (சு. 9 : 40.)

(பி - ம்.) [1] 'விளிம்பு தெற்றி' [2] 'நலத்த கட்டடுத்' (௨०)

## காவற் காடு

127. அன்ன நீர கன்கி டங்கு சூழ்கி டந்த தாழியைத்
துன்னி வேறு சூழ்கி டந்த தூங்கு வீங்கி ருட்பிழம்
பென்ன லாமி றும்பு சூழ்கி டந்த சோலை யெண்ணினப்
பொன்னின் மா[1]ம திட்கு டுத்த நீல வாடை போலுமே.

ஆழி - சக்கரவாளமலை : 120. பெரும்புறக்கடலும் பேரிருளும் : 'நேமிவரையதனைக் கருப்போதகமாங் கடல் சூழும், அழி நீரலை யாழியை வளைக்கு மந்தகாரக்குழாம்' (பாகவத. 5. 4 : 25.) சக்கரவாளத்தைச் சூழ்ந்த இருட்டு மதிலுக்குப் புறத்தேயுள்ள அகழிக்கு உவமை. சூழ்கிடந்ததாகிய அகன் கிடங்கு இருட்பிழம்பென்னலாம். இறும்பு - செய்காடு; சிறு. 148, உரை.

(பி - ம்.) [1] 'நகர்க்கு டுத்த' (உக)

## வாயில்கள்

128. எல்லை நின்ற வென்றி யானை யென்ன [1]நின்ற முன்னைமால்
ஒல்லை யும்பர் நாட ளந்த தாளின் [2]மீது யர்ந்துபோய்
மல்லல் ஞாலம் யாவு நீதி மாறு றுவ ழக்கினால்
நல்ல வாறு சொல்லும் வேத நான்கு மன்ன வாயிலே.

எல்லை நின்ற வென்றி யானை : 'தன்மத வாரணம்..... திறல்' (நன். சிறப்புப்.); 'யானைகளைத் தனக்குச் சுவாதீனமான எல்லையில் நிறுத்துவது க்ஷத்திரியர்க் கியல்பு' (க்ஷேமேந்த்ர பாரத ஸங்க்ரஹம்.) மால் - திருமால். வழக்கு - மக்கள் வழங்குதல். வாயில் என்றது கோபுரத்தோடு கூடிய வாயிலை; 'தீயழற் செல்வன் செலவுமிசைத் தவிர்க்கும், வாயின் மாடம்', 'வாயின் மாடமொடு நாயி லுள்ளவழி' (பெருங். ௬. 3 : 30-31, 25 : 14.) வாயிலுக்கு வேதம்; வாயில் யானை யென்ன நின்றன.

(பி - ம்.) [1] 'நின்று' [2] 'மீது யர்ந்தவால்' (௨௨)

129. தாவில் பொற்ற லத்தி னிற்ற வத்தி னோர்க டங்குதாட்
பூவு யிர்த்த கற்ப கப்பொ தும்பர் புக்[1]கொ துங்குமால்

[2]ஆவி யொத்த சேவல் கூவ வன்பின் வந்த ணைந்திடா
தோவி யப்பு ருவின் மாடி ருக்க ஆடு பேடையே.

பொற்றலம் - பொன்னுலகம். தவஞ் செய்தவர் விண் முதலிய இடங்களில் வசித்தல் : 348. தாளையுடைய பூவை உயிர்த்த. ஓவியப் புரு - வாயின் மாடத்தின்மேற் புருவின் வடிவமாக அமைத்துள்ள உரு. முடிபு. ஓவியப் புருவின் மாட்டுச் சேவலிருக்க ஊடும் பேடை சேவல் கூவ அணைந்திடாது ஒதுங்கும்.

(பி - ம்.) [1] 'கொதுங்கலால்' [2] 'ஆவி யொத்த வன்பு சேவல் கூவ வந்த ணைந் திடா, வோவியப்' (உக)

## கோபுரம்

130. கல்ல டித்த டுக்கி வாய்ப ளிங்க ரிந்து கட்டிமீ
[1]எல்லு டைப்ப சும்பொன் வைத்தி லங்கு பன்ம ணிக்குலம்
வில்லி டக்கு யிற்றி வாள்வி ரிக்கும் வெள்ளி மாமரம்
புல்லி டக்கி டத்தி வச்சி ரத்த கால்பொ ருத்தியே.

இது முதல் மூன்று கவிகள் குளகம். கோபுர வருணனை. கல் அடித் தடுக்கி வாய் பளிங்கு அரிந்து கட்டி - 'கற்களை யிட்டுக் கெட்டணை பண்ணித் தளவரிசைபோட்டு அடிப்படையில் பளிங்குக் கல்லைப் பிளந்து கட்டி' (ஓர் உரை.) எல் - ஒளி. பசும் பொன் வைத்து - பசும் பொன்னை உருக்கிச் சந்துக்குச் சந்து வார்த்து. வெள்ளி மாமரம் புல்லிடக்கிடத்தி - 'வெள்ளித் தகட்டை ஆதாரச் சிலையாகக் கீழே பரப்பி' (ஓர் உரை.)

(பி- ம்.) [1] 'எல்லி டப்பசும்' (உச)

131. மரக தத்தி லங்கு போதி கைத்த லத்து வச்சிரம்
[1]புரைத விர்த்த டுக்கி மீது பொன்கு யிற்றி மின்குலாம்
நிரைம ணிக்கு லத்தி ளுளி நீள்வ குத்த வோளிமேல்
விரவு கைத்த லத்தி னுய்த்த மேத கத்தின் [2]மீதரோ.

ஆளிநீள் வகுத்த ஒளி - (தூண் வரிசை) ; சிங்கத்தின் வடிவங்கள் அமைந்த தூண் ஒழுங்கு ; ஒளி - ஒழுங்கு. 'மரகதப் போதிகை வைத்துச் சுமை தாங்கும்படி அதன்மேல் வச்சிரத்தாலே உத்தரங்களும் பாவுசிலையும் பாய்ச்சிச் சந்துகளுக்கெல்லாம் சுண்ணம்போல் பொன்னைக் காய்ச்சி விட்டுச் செங்கற் பொடிபோல் மாணிக்கங்களைப் பருக்கை தட்டிக் கோமேதகத்

தாலே கொடுங்கையை ஒழுங்காய் வைத்து' (ஓர் உரை.) கை - கைம்மரம். மேதகம் - கோமேதகம்; முதற்குறை.

(பி - ம்.) [1] 'புரைத புத்த டுக்கி' [3] 'மேலரோ' (உ௫)

132. ஏழ்பொ ழிற்கு [1]மேழ்நி லத்த லஞ்ச மைத்த தென்னநூல்
ஊழு றக்கு றித்த மைத்த வும்பர் செம்பொன் [2]வேய்ந்துமீச்
சூழ்சு டர்ச்சி ரத்து நன்ம ணித்த சும்பு [3]தோன்றலால்
[4]வாழ்நி லக்கு லக்கொ ழுந்தை மௌலி சூட்டி யன்னவே.

'ஏழ்பொழிற்கு. . . . . சமைத்ததென்ன - ஒன்று மேலொன்றாயிருக்கிற ஏழு நிலையும் மேலே யிருக்கிற ஏழுலோகத்தைப்போல' (ஓர் உரை.) நூல் ஊழ் - நூலின் மரபு. குறித்து - கருதி. மணித்தசும்பு - மாணிக்கக்கலசம். நிலக்குலக் கொழுந்து - பூமிதேவி. முடிபு: அத்தசும்புகள் மௌலி சூட்டியன்ன.

(பி - ம்.) [1] 'மேணி லத்த லஞ்' [2] 'மேய்ந்து' [3] 'தோன்றுமால்' [4] 'வாழ்ந கர்க்கு லக்' (உ௬)

### மாளிகை

வேறு

133. திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் [1]சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே.

சுதை தீற்றிய மாடம்: புறநா. ௩௭௮; மணி ௬: 43; நைடத. நகர். 5. சங்க வெண் சுதை - சங்குச் சுண்ணம்பு. வெண் சுதைக்குத் திங்கள்: 641. மேக்கு நோக்கிய - மேல் நோக்கி எழும்பும். தரங்கம் - அலைகள்.

(பி - ம்.) [1] 'சுதைபுரை' (உ௭)

134. புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெ யிற்குழாம்
வெள்ளிவெண் [1]கிரியிடை விரிந்த போலுமே.

இறை - புறாக்கள் தங்குவதற்கு அமைத்த இடம்; மாடத்தின்மேல் புறாக்கள் தங்குவதற்கு இடம் வகுப்பது சிற்ப தருமம்; இந்த இடம் 'கபோத கத்தலை' எனப்படும்; கபோதம் - புறா. புறவு இறை பொருந்தும் மாளிகை;

'மாடத், திறையுறை புறவின் செங்காற் சேவல்', 'மனையுறை புறவின் செங்காற் சேவல்' பெரும்பாண். 438-9; நெடுநல். 45. தவளமாளிகைக்கு வெள்ளிமலையும் அதன் மீதுள்ள பொன்னுலியன்ற இறைகளுக்கு இளவெயிற் குழாமும் உவமை.

(பி - ம்.) [1]'கிரிமிசை' (உஅ

135. வயிரநற் கான்மிசை மரக தத்துலாம்
[1]செயிரறு போதிகை கிடத்திச் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
[2]அயிர்வுற விமைப்பன வளவில் கோடியே.

கால் - தூண். துலாம் - தூணின் மேலுள்ள போதிகையின் இருபக்கத்தும் கீழே வாழைப்பூ வடிவமாக அமைக்கப்படும் உறுப்பு; 136; சிலப். கரு : 213; பெருங். க. 37 : 102; உ. 12 : 43. அயிர்வுற இமைப்பன - ஐயங் கொள்ளும்படி விளங்குவன. குயிற்றியனவாகிய சித்திரம் இமைப்பன அளவில் கோடி.

(பி - ம்.) [1]'செயிரறப் போதிகை' [2]'அயர்வுற' (உகூ)

136. சந்திர [1]காந்தத்தின் றலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
[2]செந்தம ணியத்துலாஞ் செறிந்த திண்சுவர்
இந்திர நீலத்த வெண்ணில் கோடியே.

தலத்த - தள வரிசையையுடையன. செந்தமணியம் - செம்பொன். சுவர்கள் நீலக் கற்களா லானவை.

(பி - ம்.) [1]'காந்தத்திற் றரளம் வேய்ந்தன' [2]'செந்தணி மணித்துலாஞ்' (௩0)

137. பாடகக் காலடி பதுமத் [1]தேய்ப்பன
சேடரைத் தழீஇயின செய்ய வாயின
நாடகத் தொழிலின நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த [2]மகளி ரல்லன.

இது பெண்களுக்கும் மாளிகைகளுக்கும் சிலேடை. பெண்களுக்கு: பாடகம் அணிந்த கால்கள் பதுமம்போல்வன; ஆடவரை அணைந்திருப்பன; சேடர் - இளையராகிய கணவர்; 'ஊடநீர்க்கும், சேடரிற் சென்று புல்லிச் சிறுபுறந் தழீஇய தும்பி' (சீவக. 852.) வாய் சிவப்பினையுடையன; நடத் தொழில் செய்வன; இடை பஞ்சின் நுனியை ஒப்பன; துய் - பஞ்சின்

நுனி ; ' தூய்மைச் சுடுவெங்கனலில் ' (உ. 4 : 127.) பொன்னின் தோற்றத்தையுடையன.

மாளிகைக்கு : பாடு அகம் - வேலைப்பாடு தன்னிடம் அமைந்த. காலடி - பூமிக்குள் புதையுண்ட அடிப்படை ; சேடரைத் தழுவியுள்ளவை ; சேடர் - ஆதிசேஷன் ; பாதாளம்வரை பயின்றுள்ளவை யென்றபடி ; செய்ய ஆயின - அழகையுடையன. நாடு அகத் தொழிலன - சிற்பத் தொழிலை நாடும் இடத்தின ; நடு தூயன வாயிருப்பன ; பொன்மயமாயின ; மகளிர் அல்லன - இத் தன்மைகளாற் பெண்களல்லாதன.

(பி - ம்.) [1] ' தொப்பன ' [2] ' வளவிலாதன ' (கசு)

138. புக்கவர் கண்ணிமை பொருந்து றுதொளி
[1] தொக்குடன் றயங்கவின் ணவரிற் றோன்றலால்
திக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும்.

ஒளி தொக்கு - ஒளி கூடி. கண்ணிமையாமையாலும், ஒளி தயங்குதலாலும் மக்களும் தேவரைப் போல் தோற்றினர். வீடு-விமானம்.

(பி - ம்.) [1] ' தொக்குட றயங்கிவின் ' (கஎ)

139. அணியிழை மகளிரு மலங்கல் வீரரும்
தணிவன வறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
[1] பணிபிறி தியன்றில பகலை வென்றன.

தணிவன - தங்குவன. மணி - மாளிகைக்கு அணியும் முத்துமாலை முதலியன ; மாளிகைக்கு மணியும் பொன்னும் வனைதல் : சீவக. 115. பகல் - சூரியன்.

(பி - ம்.) [1] ' பணிபிறி தியன்றன பாங்கு மில்லையே ' (கஅ)

140. வானுற [1] நிவந்தன வரம்பில் செல்வத்த
தானுயர் புகழெனத் தயங்கு சோதிய
ஊனமி லறநெறி யுற்ற [2] வெண்ணிலாக்
[3] கோனிகர் குடிகடங் [4] கொள்ளை சான்றன.

புகழின்நிறம் வெள்ளை. கோன்நிகர் குடிகள் - செல்வத்தால் அரசனை ஒத்த குடிகள்; 'வீறுசால், மன்னர் விழையுங் குடியுள' (நான்மணிக். 54.) கொள்ளை - மிகுதி.

(பி - ம்.) [1] 'நிமிர்ந்தன' [2] 'விண்ணவர்' [3] 'கோனகர் குடி', 'கோணிவர்' [4] 'கொள்கை' (கச)

141. அருவியிற் றொழுந்துமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் சூலமெனக் கொடிவி ராவின
பருமணிக் குவையின பசும்பொன் கோடிய
[1]வருமயிற் கணத்தன மலையும் போன்றன.

அருவிக்கு முத்தமாலை; மூலோத். உலா, 215. கொடிக்கு முகில்: 36. கோடி - ஒழுங்கு. மயில் மாடத்து இருத்தல்: நெடுநல். 97-100.

(பி - ம்.) [1] 'பொருமயிற்' (கரு)

142. அகிலிடு கொடும்புகை யளாய்ம யங்கின
முகிலொடு வேற்றுமை [1]தெரிக்கி லாமுழுத்
துகிலொடு நெடுங்கொடிச் [2]சூலம் மின்னுவ
[3]பகலிடு மின்னலின் பரப்புப் போன்றவே.

கொடிச்சூலம்; கொடி - ஒழுங்கு; புறநா. உஉ: 15; மாளிகைகளின் மேற் சூலங்கள் இருத்தல்: 'புலியூர் மன்போற் பிறையணி மாளிகை சூலத்த வாய்' (சிற். 222.) [பகலிடு வின் மணிப்பரப்புத் தோன்றுமே (பி - ம்.) - பகற்காலத்து இடுகின்ற இந்திரதனுப்போல மணியொளிகளின் பரப்புத் தோன்றும்.]

(பி - ம்.) [1] 'தெரிகலா' [2] 'சூழன் மின்னிடப்' [3] 'பகலிடை மின்மினி பறப்பத் தோன்றுமே', 'பகலிடு வின்மணிப் பரப்புத் தோன்றுமே' (கசு)

143. துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்
அடியிணைச் சிலம்புபூண் டரற்று மாளிகைக்
கொடியிடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகங் கான்ற மாலையே.

கொடியிடைத் தரளவெண்கோவை - துவசத்திலேயுள்ள முத்துமாலை. தரளக்கோவை கற்பகமாலையைச் சூழ்வன. மாளிகைகளின் உயர் மிகுதி கூறியபடி. (கஎ)

**144.** காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போற்
[1]றூணிமிர் பதாகையின் சூழாந்த நைழத்தன
வாணணி மழுங்கிட [2]மயங்கி வைகலும்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே.

பதாகை - பெருங்கொடி. கொடிகளுக்கு வாழைக் கானம். தாளிலே நிமிர்ந்த. வாள் - ஒளி. வைகலும் - நாடோறும். சேண் - ஆகாயம்.

(பி - ம்.) [1] 'கோணிமிர்' [2] 'மடங்கி' (கஅ)

## கட்டிட விசேடங்கள்

**145.** [1]பொன்றொடர் மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிமம்
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.

குட்டிமம் - கல் படுத்த மேடை; திண்ணையுமாம்; 'குன்றென உயர்ந்த வக் கோயிற் குட்டிமம்', 'மணி கொள் குட்டிமம்' (சீ. 8 : 109; ரு. 7 : 24.) மண்டபம் பூத்தொடர் போன்றும் மன்றுகள் மாடமாளிகை போன்றும், குட்டிமம் குன்றுகள் போன்றும் இருந்தன வென்றும் முன்றில்கள் முத்தின் பந்தரை யடையன வென்றும் பொருள் கொள்க.

[பொன் தொடர் மண்டபம் முதலாகிய இவ்விடந்தோறும் முத்தின் பந்தர் உண்டென்க.] 'பொன் மண்டபங்களும் . . . . . சாவடிகளும் மெத்தை வீடுகளும். . . . . ரத்தின மேடைகளும் தெரு வீதிகளும் முத்தின் பந்தராய் இருக்கும்' (ஓர் உரை.)

(பி - ம்.) [1] 'பொன்றிணி' (கக)

## நகரின் ஒளி

**146.** மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற மைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் [1]கதுவ லாலரோ
பொன்னுல காயது புலவர் வானமே.

தொழில் தமைத்த. கன்னி - அழிவில்லாமை. புலவர் - தேவர்.

(பி - ம்.) [1] 'கதுவ லாலன்றே' (சௗ)

147. எழுமிடத் தகன்றிடை [1]யொன்றி யெற்படும்
பொழுதிடைப் போதலிற் [2]புரிசைப் பொன்மதில்
அழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா [3]னேமி வான்சுடர்.

நேமி - சூரியன். சூரியன் அயோத்தி யென்னும் பெண்ணின் நிழல் போன்றது. இடை ஒன்றி - நடுப்பகலில் ஒடுங்கி. போதலின் - நீளுதலால். அயோத்தியாளின் ஒளியே சூரியன் ஒளி என்பது கருத்து.

(பி - ம்.) [1] 'யேறி யெற்படும்' [2] 'புரிசைப் பொன்னகர்' [3] 'நேமி யான்' (சஎ)

அகிற் புகை

148. ஆய்ந்தமே கலையவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்
தோய்ந்தமா கடனறுந் தூப நாறுமேற்
பாய்ந்ததா ரையினிலை பகர வேண்டுமோ.

ஒப்பு: 'நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை, என்று மகில்கமழு மென்பரால் - தென்றல், அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால், புலர்த்தும் புகைவான் புகுந்து' (நள. க: 14.) (சஉ)

பல இசைகள்

149. குழலிசை மடந்தையர் குதலை கோதையர்
[1]மழலையங் குழலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தைய ரின்சொ [2]லின்னிசை
பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை.

குழல் இசை - கூந்தல் இசைந்து வருகின்ற. 'முடிக்க, முடியாத கூந்தன் முடியாள்' (திருவாருருலா, கசுo.) குழல்: பேதைப் பருவத்தாருக்கு அடை. மடந்தையர்: பருவங் குறியாது நின்றது. கோதையர் - கூந்தலையுடைய பருவ மங்கையர் என்றபடி. மகரயாழ்; 49, குறிப். எழில் இசை - அழகு பொருந்திய. சொல் இன்னிசை - சொற்களாகிய இனிய இசை. பழையர் - கள் விற்பவர்; 95. பொருநர்: 'பொருநரும் போர்க்களம் பாடுநரும் ஏர்க்களம் பாடுநரும் பரணி பாடுநரும் எனப் பலராம்' (தொல். புறத். 36, ந.) உள்ளன என ஒரு சொல் வருவித்து முடிக்க.

(பி - ம்.) [1] 'மழலைசெய் மகரயாழ் மயங்கு மெங்கணும்' [2] 'லவ்விசை' (சங)

## நகரின் வேறு பல சிறப்புகள்

150. *கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு*
*மண்ணிடை வெட்டுவ [1]வாட்கை மைந்தர்தம்*
*பண்ணைகள் பயிலிடங் குழிப டைப்பன*
*சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.*

யானை வெட்டுவதற்குக் காரணம் தன் நிழலைப் பிறிதொரு யானையென்று கருதி யென்று கூறல் அமையும். வாட்கைமைந்தர்கள் - வாள் வீரர்கள்; வாளையுடைய இளைஞர். பண்ணைகள் - விளையாட்டுக்கள்; 307. [மைந்தர் தம் பண்ணைகள் பயிலிடம் குழி படைப்பனவாகக் களிறுகள் கால்கொடு வெட்டுவன; சுண்ணம் அக்குழியைத் தூர்ப்பன.]

(பி - ம்.) [1] 'வெட்ட மைந்தர்கள்', 'வேட்கு மைந்தர்கள்' (சச)

151. *பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடைச்*
*[1]சிந்தின முத்தின மவைதி ரட்டுவார்*
*அந்தமில் சிலதிய ரகற்று குப்பைகள்*
*சந்திர னொளிகெட [2]நிலாத்த ழைப்பன.*

பெண்கள் பந்தாடல்: 93. திரட்டுவாராகிய சிலதியர்.

(பி - ம்.) [1] 'சிந்துவ' [2] 'தழைப்ப தண்ணிலா' (சரு)

152. *அரங்கிடை மடந்தைய ராடு வாரவர்*
*கருங்கடைக் [1]கண்ணயில் காமர் நெஞ்சினை*
*உருங்குவ மற்றவ ருயிர்க ளன்னவர்*
*மருங்குல்போற் றேய்வன வளர்வ தாசையே.*

உருங்குவ - உண்ணுவ; 'விடமுடை யரவினுட லுயிருருங் குவணம்' (பரி. ச: 42.) காமர் - அழகமைந்த யுவர்.

(பி - ம்,) [1] 'கண்ணிணை' (சசு)

153. *பொழிவன சோலைகள் புதிய தேன்சில*
*விழைவன தென்றலு மிஞிறு மெல்லென*
*நுழைவன வன்னவை நுழைய நோவொடுங்*
*குழைவன பிரிந்தவர் கொதிக்குங் கொங்கையே.*

சோலைகள் புதியதேன் சில பொழிவன. மிஞிறு - வண்டுகள். பிரிந்தவர் - கணவரைப் பிரிந்தமகளிருடைய. (ருஎ)

154. இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் [1]பாடலா னிமிர்வ வவ்வழிக்
கறங்குவ வள்விசிக் கருவி கண்முகிழ்த்
துறங்குவ மகளிரோ [2]டோதுங் கிள்ளையே.

இறங்குவனவாகிய யாழ்ப் பாடலால் நிமிர்வன. வள்விசிக் கருவி : 53.

(பி - ம்.) [1] 'பாடல்போய் நிமிர்ந்த வவ்வழி' [2] 'டோதுங்கும் கிள்ளையே' (ருஅ)

155. குதைவரிச் சிலைநுதற் கொவ்வை வாய்ச்சியர்
[1]பதயுகத் தொழிலொடு பழிப்பி லாதன
ததைமலர்த் தாமரை யன்ன தாளினால்
உதைபடச் [2]சிவப்பன வுரவுத் தோள்களே.

[பதை அகம் (பி - ம்.) - ஊடலிற் பதைத்த மனம்; பதவு கைத்தொழிலொடு என்ற பாடத்துக்கு மென்மையான கைத்தொழிலொடு என்பது பொருள்.] பதயுகத் தொழில் - கூத்து; இங்கே சாந்திக் கூத்து, விநோதக் கூத்து; இரண்டு பாதங்களுக்கும் ஊட்டும் செம்பஞ்சுக் குழம்புமாம்.

(பி - ம்.) [1] 'பதவுகைத்', 'பதையகத்' [2] 'சிவந்தன' (ருகூ)

156. பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு [1]மாசையால்
எழுதுசித் திரங்களு [2]மிமைப்பி லாதவே.

பொழுதுணர் வரிய நகர் : 'வில்லுமிழ் கலன்க ளியாவு மிளிர்சுடரெறிக்கு மாற்றால், எல்லியும் பகலுந் தோன்றா திமையவ ருலக மேய்க்கும்' (நைடத. நாட்டுப். 27.) கற்பினால் தொழத்தகும் பெருமையையுடைய மடந்தையர். மாதரின் வனப்ப நோக்கிக் கண் இமையாமை : சீவக. 2506; மகளிர் மேனிக்கு விளக்கு : 157.

(பி - ம்.) [1] 'மாசைகொல்' [2] 'மிமைப்பி லாதன' (சுo)

157. தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
இணரொளி பரப்பிநின் றிருடு ரப்பன

திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே.

தணி - தண்மை ; பரி. சு : 29, சு : 11. (கூ)

158. பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
[1]மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைக ளல்லன புரவித் [2]தாள்களே.

தண்ணுமையும் பாணியும் பண்ணும் உற விதங்களின் விதிமுறை பதங்களிற் சதிமிதிப்பவர். தண்ணுமை - மத்தள ஒலி. பாணி - கைத்தாளம். உற - ஒத்து நிகழ. சதி - தாளவொத்து ; 'தாளினைப் பெயர்த்து முன்னஞ் சதிமுறை பிறழா தாட' (கூர்ம. திருக்கல். 56.) மதங்கியர் - ஆடுமகளிர். மகளிர் காலிற் கட்டிய சதங்கைகள் வகுத்துக் காட்டுவ, அவை அல்லவாயின் குதிரையின் தாள்கள் வகுத்துக் காட்டும் ; தார்கள் (பி - ம்.)—குதிரையின் கழுத்திற் சதங்கை ; 171. 'மெத்துந் தகவும் விதமும் படவே, தித்தொந் தொந்தொந் தித்தீ யென்றென், றொத்துந் தாளத் தொக்கத் தத்தித், தத்தும் பரிதன் தாளொத் ததுவே' (திருவால. 28 : 53.)

(பி - ம்.) [1] 'மதங்கியர்க் கச்சதி' [2] 'தார்களே' (கூஉ)

159. முளைப்பன முறுவலம் முறுவல் வெந்துயர்
விளைப்பன வன்றியு மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண்ணிடை யிளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ னாரமே.

'அந்நகரில் வெந்துயர் விளைப்பன முறுவலே, இரட்சிக்கிறவரைப் பட்சிப்பன நகில்களே' (ஓர் உரை.) (கூங)

160. இடையிடை யெங்கணுங் களிய ருதன
நடையின வன்னங்க ணளின நீர்க்கயல்
பெடையின வண்டுகள் பிரச [1]மாந்திடுங்
கடகரி யல்லன மகளிர் கண்களே.

யானை பிரசம் மாந்தல் : 'மாரியங் கள்ளின் போர்வல் யானை' (பதிற். உக : 17.) பொருள். அல்லன - இவை அல்லாதன, களி - மகிழ்ச்சி, தேன்,

களிமண், கள், யானை மதம், அஞ்சனக் குழம்பு; சிலேடை. களி அறுதன அன்னம், தாமரை, கயல் வண்டுகள், கரி, மகளிர் கண்கள்.

(பி - ம்.) [1] 'மார்த்திடும்', 'மார்ந்திடும்' (௧௪)

161. தழல்விழி யாளியுந் துணையுந் தாள்வரை
முழைவிழக் கிரிநிகர் களிற்றின் மும்மத
மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்
குழைவிழ மதில்விழுங் கொடித்திண் டேர்களே.

முழையில் விழும்படி மும்மத மழை விழும். தாள்வரை - பாதசைலம். குழை - சேறு. (௧௫)

162. [1]ஆடுவாம் புரவியின் குரத்தை [2]யாப்பன
சூடுவா ரிகழ்ந்தவத் தொங்கன் மாலைகள்
ஓடுவா ரிழுக்குவ தாட லூட்டுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே.

குரம் - குளம்புகள். யாப்பன - கட்டுவன. ஓடுவார் இழுக்குவது சாந்தம்; 'கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த, சீதக் களபச் செழுஞ் சேற்றால் - வீதிவாய், மானக் கரிவழுக்கும், (நள. க : 13.)

(பி - ம்.) [1] 'ஆடுவார்' [2] 'யார்ப்பன' (௧௬)

163. இளைப்பருங் குரங்களா லிவுளி [1]பாரிணைக்
கிளைப்பன வவ்வழி [2]கிளைத்த தூளியின்
ஒளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
துளிப்பன குமரர்தந் [3]தோளின் மாலையே.

இவுளி - குதிரை. ஒளிப்பன - மறைக்கப்படுவன. [தொய்யின் மாலை (பி-ம்.) - தோளிற் பூண்ட மாலை.]

(பி - ம்.) [1] 'தாரணி' [2] 'கிளர்ந்த' [3] 'தொய்யின்' (௧௭)

164. விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடை கணிப்பருங் கதிர்க ணாறுவ
மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே.

யானை மதம் நாறுதல் : தக்க. 3, விசேடக். அடிகள் 2, 3 சில பிரதிகளில் பின் முன்னாக உள்ளன. கலக்கடை - ஆபரணக் கடைகள் ; [கலக்கடை - வாசல் தோறும் அணிந்த ஆபரணம்.] கூந்தலில் இயற்கை மணம். (கூஅ)

### அமராவதிக்கும் அளகைக்கும் மேம்பட்டது அயோத்தி

165. [1]கோவையி னிதனொடெண் குறிக்கி லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் [2]விளங்கிடத் திகலி யிந்நகர்
ஆவணங் கண்டபின் னளகை தோற்றதே.

கோவையின். . . . குறிக்கிலாத - அயோத்தியின் வரிசையில் வைத்து எண்ணப்படாத. கோவை யிந்நகர் (பி - ம்.) - ஒழுங்காகக் கட்டியிருக்கிற தெருக்களையுடைய நகர்' (ஓர் உரை.) இகலி - பகைத்து. ஆவணம் - கடைத் தெரு. அளகை தோற்றது ; அமராவதியைச் செப்புகின்றது என் ?

(பி - ம்.) [1] 'கோவையிந் நகரொடெண்' [2] 'வழங்கிடத்' (கூகூ)

### மைந்தர் கூட்டத்திற் காண்பன

166. அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி [1]யணிவெயில் கால்வ மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர [2]மிரைப்பன மைந்த ரீட்டமே.

அயில் - வேல். மான்மதம் - கஸ்தூரி. மதுகரம் - வண்டு. ஒலித்தல் முதலியன மைந்தரீட்டங்களில்.

(பி - ம்.) [1] 'வெயிற்குழாங்' [2] 'மிசைப்பன' (சுo)

### பலவகை ஒலிகள்

167. வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி [1]முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியந் [2]துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே.

வளை - சங்கு. வயிர் - கொம்பு. வயிரும் வளையும் : முருகு. 120. கின்னரம் - ஒரு வாத்தியம் ; ஒருவகைப் பறவையின் ஒலியும் என்பர் ; 940. துளை - குழல் முதலிய துளைக் கருவிகள். சும்மை - ஒலி.

(பி - ம்.) [1] 'குழலொலி' [2] 'துவைக்குமொல்லொலி' (சுக)

### பல மண்டபங்கள்

168. மன்னவர் தருந்திறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்
உன்னரு மருமறை யோது மண்டபம்.

பட்டி மண்டபம் - வித்வஜ்ஜனமண்டபம் ; திருவா. சதகம், 49 ; மணி. : 60-61 ; சிலப். ௫ : 102, உரை. அடி 3 - 4 மாறியுள்ளன. (௬௨)

### வேறு பல சிறப்புக்கள்

69. இரவியிற் சுடர்மணி யிமைக்குந் [1]தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே.

இமைக்கும் - பிரகாசிக்கும். தோரணத்தையுடைய தெருவைக் காட்டிலும். தானங்கள் - மதங்கள். புரவிப் பந்திக்குக் கடல்.

(பி - ம்.) [1] 'தோரணந்' (௬௩)

170. சூளிகை மழைமுகி றுடக்குந் தோரண
மாளிகை மலர்வன மகளிர் வாண்முகம்
வாளிக ளன்னவை மலர்வ மற்றவை
ஆளியை யன்னவர் நிறத்தி லாழ்பவே.

சூளிகை - மாடத்து உச்சியறை. தோரண மாளிகை : 171. வாளிகள் அன்னவை - பார்வை. நிறம் - உயிர்நிலை ; 'கோல் தெரிந்து, வரிநுதல் யானை யருநிறத் தழுத்தி' (அகநா. ௧௭௨ : 7 - 8.) (௬௪)

171. மன்னவர் கழலொடு மாறு கொள்வன
பொன்னணி தேரொலி புரவித் தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க [1]வேங்குவ
கன்னியர் குடைதுறைக் [2]களக வன்னமே.

புரவித்தார் - குதிரைகளின் கழுத்திற் கட்டிய சதங்கை மாலை. தேரொலி தாரொலிகள் கழல்களுக்கு. (களக வன்னம் - களஹம்ஸம்.) அன்னப்பறவை

மின் குரல் சிலம்பொலிக்கு : 348, 865, 982 ; 'மின்னார் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்' (சீவக. 2890.); 'சிலம்பின் குரலன்னம்' (அரங்கத்தந். 92.)

(பி - ம்.) [1] 'வெங்கணும்' [2] 'கமல வன்னமே' (கசு)

## பொழுது போக்கு

172. ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவு மகன்புன லாடி யம்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர்.

அகன் புனலாடி மலர் சூடல் : 175 ; 'பூக்கொய்து நீராட' (981.) (கசுசு)

## இதுவும் அது

173. முழங்குதிண் கடகரி [1]மொய்ம்பி னூரவும்
எழுங்குரத் திவுளிபோ டிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர்.

குரம் - குளம்பு; இவுளி - குதிரை. பழங்கணோடு-துன்பத்தால் ; வழங்கல் - பயன் கருதாமற் கொடுத்தல் ; சிந். 127, பேர்.

(பி - ம்.) [1] 'முன்பி னூரவும்' (கசுஎ)

## இதுவும் அது

174. கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாலுளைப்
புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

யானைப்போர் : குறள், 758 ; பு. வெ. 350. வால் - வெண்மை. உளை - தலையாட்டம். பொரு இல் - ஒப்பற்ற. குதிரைச் செண்டாடல் : 'வாவுறுஞ், செண்டியங்கு பரி' (உ. 9 : 11) ; 'நிலைச் செண்டும் பரிச்செண்டும் வீசி' (பெரிய. கழறிற். 126.) (கசுஅ)

## இதுவும் அது

175. நந்தன வனத்தலர் கொய்து நவ்விபோல்
வந்திளை யவரொடும் வாவி யாடிவாய்ச்

செந்துவ ரழிதாத் தேறன் [1]மாந்தித்தா
துந்தலிற் பொழுதுபோஞ் சிலர்க்கவ் வொண்ணகர்.

நவ்வி - மான். இளையவர் - மகளிர். செந்துவரழிதா : 88, 1074. தூது உந்தல் கணவர் பால்; 1072-3.

கொய்து, ஆடி, மாந்தி என்ற முறை பின்னுள்ள பூக்கொய், நீர் விளையாட்டு, உண்டாட்டுப் படலங்களை நினைப்பிக்கின்றன.

(பி - ம்.) [1] 'மாந்திச்சு' (௬௯)

வேறு

கோடிகளின் வருணனை

176. நானு[1] விதமா நளிர்மாதிர வீதி யோடி
மீனூறு வேலைப் புனல்வெண்முகி லுண்ணு மாபோல்
ஆனாத மாடத் திடையாடு கொடிகண் மீப்போய்
வானூறு நண்ணிப் புனல்வற் றிட நக்கு மன்றே.

நானுவிதம் : நானு - பல. நானுவிதமாம் மாதிர வீதி - பலவகையான ஆகாய வீதிகளில். கொடிகளுக்கு வெண்மேகம்.

(பி - ம்.) [1] 'விதமாய்' (௭0)

நகரமாந்தர் சிறப்பு

177. [1]வன்றோ ரணங்கள் புணர்வாயிலும் வானி னூடு
சென்றோங்கு மேலோ ரிடமின்றெனச் செய்பொ னிஞ்சி
குன்றோங்கு தோளார் குணங்கூட்டிசைக் குப்பை யென்ன
ஒன்றோ டிரண்டு முயர்ந்தோங்கிய [2]வும்பர் நாண.

தோரணங்கள் - தோரணக்கம்பங்கள்; 1270; ௫, 9 : 15, 11 : 21. 'வன்றோல் புணர்ந்த மணிவாயில்' என்ற பாடத்திற்கு வலிய யானைகள் சேர்ந்த ஆராய்ச்சிமணியையுடைய வாயிலெனக்கொள்க. இஞ்சியின் உயர்வு புகழின் உயர்வுக்கு : 'கோடுறழ்ந்தெடுத்த' என்று தொடங்கும் (பதிற். 16, உரை) பாடலை நோக்குக. ஒன்றோடிரண்டு - மூன்று. மூன்று மதில் : புறநகர், இடைநகர், அகநகர் என்னும் மூன்றின் மதில்கள்.

(பி - ம்.) [1] 'வன்றோ ரணங்கள் புணர்வாயிலும் வானி னும்பர்', 'வன்றோல் புணர்ந்த முனிவாயிலும் வானி னூடு', 'வன்றோற் புணர்ந்த மணிவாயிலும் வானி னும்பர்,' [2] 'வோங்க ஞாண.' (௭௧)

178. காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாதர்
ஆடுங் குளமு மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவு மணப்பந்தரும் வீணை வண்டு
பாடும் [1]பொழிலு மலநல்லறப் பள்ளி மன்னோ.

காடுமுதல் பொழிலிறுதியாக வுள்ளன அல்லாதன அறப்பள்ளி. அறப்பள்ளி - தருமசத்திரங்கள். உம்பர் வீடு - மேல் வீடு; செய்குன்றின் மேலிடம். இவை எல்லாம் மலர் பல்லவப் பள்ளிகள்.

(பி - ம்.) [1] 'பொழிலும் மலர்ப்பல்லவப்' (எஉ)

179. தெள்வார் தழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு மில்லை யாரும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மன்னோ.

வள்வார் முரசம்; முரசு அதிர்நகர் : 336. முரசம் கடலுக்கு; பு. வெ. 37. கொள்வார்.....மன்னோ : 98. (எங)

180. கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்லரல் லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மன்னோ. (எச)

181. ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம் முதற்றிண் பணைபோக்கி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு மம்ம லர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே.

ஏகம் முதல் - ஒரு முதல்; என்றது விதையை. பணை - கிளைகள். போக்கி - மேலோங்க விட்டு. சாகம் - இலை. போலும் : அசைநிலை. (எரு)

கீழ்வரும் இரண்டு செய்யுட்கள் நகரப் படலத்தின் இறுதியிற் சில ஏடுகளிற் காணப்படுகின்றன:

'எங்கும் பொலியுஞ் பாஞ்சுட ராகி யெவ்வுயிரும்
மங்கும் பிறவித் துயரற மாற்று நேசம்
தங்குந் தருமத் துருவாகித் தாணி மீது
பொங்குங் கருணைப்புத்தேள் கருத்தி யாமெவன் புகல்வோம்.'

'வேத மதனுள் விளைபொருள் விகற்பத்து ளடங்காச்
சோதி மயமாய்த் துலங்கித் தொல்லுயிர்த் தொகைபலவாய்
ஓது புவன முதராத்து ளொடுக்கியே பூக்கும்
ஆதி முதல்வ னமரிட மயோத்திமா நகரம்.',

நகரப் படலம் முற்றும்.

---

## 4. அரசியற் படலம்

தசரத சக்கரவர்த்தியினது அரசியலின் பெருமையைக் கூறும் பகுதி அரசியற் படலம். சில பிரதிகளில் இது நகரப் படலத்துள் அடங்கும்.

வேறு

182. அம்மா ணாகருக் கரச னரசர்க் கரசன்
செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்.

உலகேழ் என்றது ஏழு தீவுகளை ; 1238. தனிக்கோல்.....செல்ல நின்றான்: 812. இராமபிரானை முற்கூறினார் கதாநாயகனாதலின் ; 'சீவகனை முற்கூறினார் கதைக்கு நாயகனாதலின்' (சீவக. 6, ந.) (க)

183. [1]ஆதிம் மறையும் மருளும் மறனும் மமைவும்
ஏதில் மிடல்வீர முமிகையு மெண்ணில் யாவும்
நீதி [2]நிலையு மிவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுது மிவற்கேபணி கேட்ப மன்னோ.

ஒற்றுக்கள் சந்த நோக்கி விரிந்தன. அருளும், அறனும் : 112. ஏதில் ; ஏது=ஏதம் - குற்றம் ; கடைக் குறை ; 1193. நேமியினோர் என்றது தசரதனுக்கு முன்பு ஆண்ட மன்னர்களை. நேமியினோர்க்குப் பாதிப்பணி கேட்ப ; முழுதும் இவற்கே கேட்ப.

(பி - ம்.) [1] 'ஆதிம் மநியும் மருளு' [2] 'நிலையும் மிலை' (உ)

184. மொய்யார் கலிசூழ் முதுபாரின் [1]முகந்து தானக்
கையார் புனலா னனையாதன கையு மில்லை
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த [2]யாரும்
செய்யாத யாக மிவன்செய்து மறந்த மாதோ.

மொய் - வலிமை. ஆர்கலி - கடல். கையும் இல்லை; கை - அந்தணரின் கை, ஏற்றல் அவர்க்கே உரியதாதலின். மறந்த - இளமையிலேயே செய்து முடித்தமையின் இப்பொழுது அவை மறந்தவையாயின. தசரதன் பல யாகங்கள் செய்தமை: உ. 1 : 36. தசரதன் எல்லாயாகங்களையும் செய்து முடித்தானென்பது கருத்து.

(பி - ம்.) [1] 'முகந்த தானக்' [2] 'யாவும்' (க)

185. தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்ப யப்பிற்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு [1]மன்னன்.

தாய் ஒக்கும் அன்பு: 1146, சு. 3 : 19, 82. நலம் பயப்பில் தவம் ஒக்கும்; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப் படும்' (குறள், 265.) ஆயப்புகுந்தால் - மக்கள் ஆராயத் தொடங்கினால். அறிவொக்கு மென்றது, 'அறிதோ றறியாமை கண்டற்றால்' (குறள், 1110) என்றபடி தம் முன்னையறிவு அறியாமையாகத் தோன்றுதல்பற்றி. எவர்க்கும் - எப்படிப்பட்டவருக்கும்.

(பி - ம்.) [1] 'மன்னோ' (ச)

186. ஈய்ந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணி னன்னூல்
ஆய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர் வாளாற்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் [1]றிருவிற்றொடர் போக வெளவம்.

ஈய்ந்தே..... கடல்: 1; 'இல்லோர் புன்க ணீகையிற் றணிக்க, வல்லான்' (கலி. சஎ : 5.) அளக்கர் - கடல். தசரதனது கல்வி யறிவு: 'சொற்றுறை யறிபெருமையான்' (உ. 1; 12.) போகம் - அனுபவம். 'திருவின் றொடர் போகவெளவம்' என்ற பாடத்திற்குத் திருவினது தொடர்பையும் போகவெளவத்தையும் என்க.

(பி - ம்.) [1] 'திருவின்றொடர்' (இ)

இப்பாடலுக்குப் பின் ஒருபிரதியிற் காணப் பட்ட பாடல் வருமாறு:

'விரிகதிர் பரப்பிமெய்ப் புவன மீதிருள்
பருகுறும் பரிதியங் குலத்திற் பார்த்திபன்
இரகுமற் றவன்மக னயனென் பானவன்
பெருகுமா தவத்தினிற் பிறந்த தோன்றலே.'

### வேறு

187. வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமு மொருவழி யோட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தசர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

வெள்ளமும்.... வேசையர் உள்ளமும் ஒரு வழியோட: 'மாாயுநறுவு மகளிர் மனமும், தக்குழி நில்லாது' (பெருங். க. 35 : 156 - 7.) வள்ளுறை அயில் மன்னர் மன்னன்: அயிலை உறையினின்று எடுக்காமலே பகைவரை அடக்கினான் என்பது கருத்து; 729, 748, உ. 1 : 57; ௬. 2 : 84; புறநா. ௬௨௬ : 7. 'உறை நிறுத்திய வாளினாற் பகையிரு ளொதுக்கி' (திருவிளை. நாடு. 1.) (௬)

188. நேமிமால் வரைமதி லாக நீள்புறம்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னர்க்குப்
பூமியு மயோத்திமா நகரம் [1]போன்றதே.

நேமிமால்வரை: 120, 127. பாமம் - ஆழம்; 'பாமமாகடல்' (790.) வாமம் - அழகு. பூமி அயோத்தி; 'நாடெ லாமொரு நன்னக ராயதே' (1204.)

(பி - ம்.) [1] 'போலுமே' (௭)

189. [1]யாவரும் வன்மைநே [2]ரெறிந்து நீட்டலான்
மேவருங் கையடை வேலுந் தேயுமால்
கோவுடை நெடுமணி மகுட கோடியால்
சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால்.

யாவர் வன்மையும் நேர் எறிந்து. நீட்டலாற் படைதேய்தல்: 'கழுந் தோடும் வரிசிலை' (251.) கோவுடை - சிற்றரசர்களுடைய.

(பி - ம்.) [1] 'ஆவரும்' [2] 'ஏறிந்து நீண்டலான்' (அ)

190. மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி யமையு மாதலால்
விண்ணிடை மதியினை மிகையி [1]தென்பவே.

அண்ணல்தன். அமையும் - போதும்.

(பி - ம்.) 1 'தென்னவே' (கூ)

191. வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினான்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலால்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினான்.

குடிகள் உயிரைத் தன் உயிரொப்ப ஓம்பல் : 395 ; 'மண்ணில் வாழ்தரு மன்னுயிர்க்கெலாம், கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்' (பெரிய. திருவாரூர்ச். 14.) உயிரெலாமுறைவதோருடம்பு : 'வைய மன்னுயி ராகவம் மன்னுயிர், உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்கு' ( உ. 2 : 17); 'நெல்லு முயிரன்றே . . . . மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்' (புறநா. கஅசு.) ஆயினான் - ஒத்தான். (கo)

192. குன்றென வுயரிய குவவுத் தோளினான்
வென்றியந் திகிரிவெம் பருதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

வென்றியந்திகிரி - ஆஞ்ஞாசக்கரம் ; 409 ; பதிற். கச : 18 - 9. திகிரிக் குச் சூரியன் : தக்க. 1. (கக)

193. எய்யென வெழுபகை யெங்கு மின்மையால்
[1]மொய்பெருந் தினவுறு முழவுத் தோளினான்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.

[எய்யென வெழுபகை - விரைந்து வரும் பகை.] மொய் - போர். தோள் தினவு : 1369 ; கூ. 6 : 44, 63. வறிஞன் ஓம்பும் ஓர்செய் : 'நெஞ்சே, ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத், தோரே ருழவன் போலப்,

பெருவிதுப் புற்றன்றால்' (குறுந். கஅக: 3 - 6); 'மிடிய னொருசெய் யாளனச் செய் விளையக் காக்குஞ் செயல்போல' (பிரபு. மாயையுற்பத்தி. 49.)

(பி - ம்.) [1] 'மொய்பொரு' (சஉ)

அரசியற் படலம் முற்றும்.

---

## 5. திருவவதாரப் படலம்

திருமால் ஸ்ரீ ராமராக அவதாரம் செய்ததைத் தெரிவிக்கும் பகுதி திருவவதாரப் படலம் எனப் பெறும்.

### தசரதன் வசிட்டமுனிவரிடம் புத்திரனில்லாக் குறையைத் தெரிவித்துக் கொள்ளுதல்

194. ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா [1]முனிவரற் றொழுது தொல்குலத்
[2]தாயருந் தந்தையுந் தவமு மன்பினன்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

ஆயவன் - அத்தகைய பெருமை வாய்ந்த தசரதன். முனிவரன் - முனிவர்களுள் மேலானவன். தாயாரும்......பிறவும் மற்றவர்க்கு வேறு வேறாகும்; எனக்கு இவை எல்லாம் நீயே என்பது கருத்து; 'எந்தை நீ யாயு நீ யெம்முனீ தவம், வந்தனைத் தெய்வ நீ மற்று முற்றுநீ' (சு. 2 : 73.)

194 முதல் 'என்ன மாமுனிவன்' என்ற 223 - ஆம் செய்யுள் முடியத் திருவாக்குரைத்த படலம் என்று ஒரு பிரதியிற் காணப்படுகிறது.

(பி . ம்) [1] 'முனிவரத் தொழுது', 'முனிவனைத் தொழுது' [2] 'தாயுநற் றந்தையுந் தமரு' (க)

195 எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினும்
தங்குலம் [1]விளங்கிடத் தரணி தாங்கினர்
மங்குத லில்லெனா வரம்பில் வையகம்
[2]இங்குநின் னருளினா னினிதி னோம்பினேன்.

தன் முன்னோர் செய்தியைத் தசரதன் கூறுதல்: உ. 1: 64. நின் அருளினால்: உ. 1: 44.

(பி - ம்.) [1] 'விளங்குறத்' [2] 'இங்குனதருளினு' (உ)

196. அறுபதி னாயிர மாண்டு மாண்டுற
உறுபகை [1]யொடுக்கியிவ் வுலக மோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
[2]மறுகுவ தென்பதோர் மறுக்க முண்டரோ.

அறுபதினாயிரம் ஆண்டு: 'வையம் அறுபதினாயிர மாண்டு மாண்டவன்' (உ. 12: 72.) ஆண்ட வருடத்தொகை வான்மீகத்தில் வேறு. மகா சக்கரவர்த்திகளுக்கு எல்லாம் அறுபதினாயிரம் என்ற கணக்கு: சீவசம்போதனை: க. 757, உ. 1: 13, 12: 72. 'எற்பின் வையகம் மறுகுவது' என்று இங்கே கூறியதற் கேற்ப, 271 - ஆங்கவியில், 'நின்னருளிற் பூத்தவென், ஞான்ற தொல் குலமினி யரசின் வைகுமால்' என்கிறான். மறுக்கம் - வருத்தம்.

(பி - ம்.) [1] 'யடக்கியே' [2] 'மறுகுறு மென்பதோர்' (க)

197. அருந்தவ முனிவரும் மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினார்
பெருந்துய [1]ருழக்குவ ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன்.

அந்தணரும் முனிவரும் வேறு வேறு. வாழ்வு - மகிழ்வு.

(பி - ம்.) [1] 'ருழக்குக' (ச)

இதன்பின் அதிகப் பாட லொன்று வருமாறு:

'பொறையிலா வறிவு போகப் புணர்ப்பிலா விளமை மேவத்
துறையிலா வனச வாவி தூசிலா போலத் தூய்மை
நறையிலா மலருங் கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரும் போலச் சேயிலாச் செல்வ மென்றான்.'

கவி 222 வரை வசிட்டமுனிவர் நினைத்த நிகழ்ச்சி

198. முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினான்.

முரசறைகடை: 336. முத்த மாமுடி: இது முத்துக் கொண்டை யென வழங்கும்; கிரீடத்தின் நுனியிலும் முகத்தின் புறத்திலும் முத்துக் கொத்துக்கள் அமைந்திருக்கும். சரோருகன்மகன் - பிரமனுடைய மகன்; உ. 1 : 34, 12 : 69. 'எண்ணினான் வாய்மையே' (199) என இயைக்க; வினைமுற்றை முன் கூறிச் செயப்படுபொருளைப் பின் கூறுவது கம்பர் இயல்பு; 264-5. (௬)

199. அலைகட னடுவணோ ரனந்தன் [1]மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பனென்
றுலைவுறு மமரருக் குரைத்த [2]வாய்மையே.

(கொலைத் தொழில் எதுகை பற்றிக் கொலை தொழில் என்றாயிற்று.)

(பி - ம்.) [1] 'மீக்கரு' [2] 'வாய்மையை' (௬)

உருத்திரன் தேவர்களோடு செல்லல்

200. சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் [1]யாணினி
அடுகில னெனமறுத் தவரொ டேகினான்.

கடு அமர் களன் - விடம் அமைந்த கழுத்தினன்; 238; உருத்திரமூர்த்தி. அடுகிலனென்றது வரம் கொடுத்ததுபற்றி; அரக்கர்கள் உருத்திரமூர்த்தியைப் பூசிக்கிறது பற்றியுமாம்.

(பி - ம்.) [1] 'யாமினி, யடுவதில் லெனமறுத் தவரொ டேகினார்' (எ)

இதற்குப்பின் சில பிரதிகளில்மட்டும் கீழ்வரும் பாடல் காணப்படுகிறது:

'[1] கறைமிடற் றிறைவனுங் கடவு ளோர்களும்
மறைமுதற் கிழவனை வந்து நண்ணலும்
முறைமையிற் [2] கடன்முறை முற்றி முண்டகத்
திறைவனு மவரொடு மினிதி னேகினான்.'

(பி - ம்.) [1] 'கறையடிக் கிறைவனுங்', 'கறைமிடற் றண்ணலுங்'
[2] 'செய்கடன்'

### யாவரும் நான்முகனிடம் அரக்கரின் கொடுமையைத் தெரிவித்தல்

201. *வடவரைக் குடுமியி னடுவண் மாசறு*
*சுடர்மணி மண்டபத் துன்னி நான்முகக்*
*கடவுளை யடிதொழு [1]தமரர் கண்டகர்*
*இடிநிகர் வினையம தியம்பி னாரரோ.*

மேருவின் உச்சியில் பிரமன் வாழ்தல் : சு. 23 : 49. அமரர் : எழுவாய். வினையம் - சூழ்ச்சி ; வினையமது : 25.

(பி - ம்.) 1 ' தமர கண்டகர் ' (அ)

202. *பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடன்*
*மேகநா தன்புகுந் திலங்கை மேயநாட்*
*போகமா மலருறை [1]புனித வொல்லையின்*
*ஏகிநீ மீட்டமை யியம்ப வேண்டுமோ.*

பாகசாதனன் - இந்திரன். மேகநாதன் - இந்திரஜித்து ; இவன் இராவணன் மகன். போகம் - அகலம், மலர்ச்சி ; ஆபோகம் என்பதன் முதற் குறை. ' சொல்லினாரரோ ' என்ற பாடத்துக்கு எழுவாய் அமரர்.

(பி - ம்.) 1 ' புனிதன் மீட்டமை தோகைபா கற்குறச் சொல்லி னாரரோ '

சில பிரதிகளில் ' பாக சாதனன்றனை ' என்பதற்குப் பின் அடியிற் கண்ட செய்யுள் காணப்படுகிறது :

' என்றுதம் மிடர்முழு தியம்பி யெங்ஙனும்
கன்றிய நிருதரை யழித்துக் காத்தியேல்
ஒன்றிய வுலகமு முயிர்கள் யாவையும்
இன்றுநீ படைத்ததென் றியம்பி னாரரோ.' (க)

### யாவரும் திருமாலிடம் சேறல்

203. *இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்*
*திருவிலி [1] வலிக்கொரு செயலின் றெங்களால்*
*கருமுகி லெனவளர் கருணை யங்கடல்*
*பொருதிடர் தணிக்கிலுண் டெனும்[2]பு ணர்ப்பினால்.*

இருபது. . . . . . . திருவிலி: இத்தொடரையே பின்னும் கூறுவர் கம்பர்; சு. 4 : 39. திருவிலி; திரு - அருட்செல்வம்; 'அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்' (குறள், 241.) புணர்ப்பு - சூழ்ச்சி.

(பி - ம்.) [1] 'தனைத்தெறுஞ்' [2] 'டெனும்புணர்ப்பினூர்!' 'டெனப் புகன்றனன்'

இதற்குப்பின் மூன்று பாடல்கள் அதிகமாக உள்ளன.

(1) 'ஆயவ ரயன்முத லமர ரீறிலா
நாயக னிருபத நயந்து சிந்தைமீ
தோய்விலா தவனரு மறைக ளோதியே
நேயமோ டிருந்திவை நிகழ்த்தன் மேயினூர்.'

(2) 'காத்தி நீயெமைக் காக்கிலர் தம்மையாம்
ஏத்தி யேயினைத் தோமிறை வாவிடர்ப்
பார்த்தி யோதிருப் பாற்கடற் பள்ளியின்
மூர்த்தி யேமுதல் வாமுகின் மேனியாய்.'

(3) அந்த காரத் தரக்கர்செய் தீமையால்
நொந்து ளோமிறை வாநொடிப் போதினில்
வந்து மாற்றிடும் வண்ண மெமக்கருள்
எந்தை யேகரு ணாகர னேயென.'

தேவர்கள் பிரமதேவரை யடைந்து பின் திருமாலை யடைந்தன ரென்பது வான்மீகத்தில் இல்லை; மந்திரிகளையும் வசிட்டரையும் நோக்கித் தசரதன் தனக்குப் பிள்ளையில்லாக் குறையைக் கூறினான் என்பது வான்மீகம். (௧௦)

204. [1]திரைகெழு பயோததித் துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினாற்
கரகம லங்குவித் திருந்த காலையிற்
பரகதி யுணர்ந்தவர்க் குதவும் பண்ணவன்.

பயோததி - பாற்கடல்- தேவர்கள் ஒன்று கூடித் திருமாலைக் கண்டு பேசியது தசரதனுடைய யாகசாலையின்கண் என்பர் வான்மீகி முனிவர்.

(பி - ம்.) [1] 'திரைதவழ் பாற்கடற் றுயிலுந் தேவனை'

இதன் பின் கீழ்வரும் பாடல் ஒரு பிரதியிலுள்ளது:

'அறிதுயி லெழுந்தன னமரர் கூப்பிடு
மறைமொழித் துதியொலி வந்தி சைக்கவே
நிறைகுணத் தமரர்க ளினைத் தழைப்பதை
இறைவனுந் திருவுளத் தறிந்தங் கெய்தவே.' (௧௧)

### திருமால் காட்சி யளித்தமை

205. கருமுகி லுமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி [1]யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்.

தாமரை - செந்தாமரை. காடு - தொகுதி (சீவக. 2336, ந.) கருமு கில் தாமரைக் காடு பூத்து: 'நீலக்கார்முகில் கமலம் பூத்து.......வரு வதே போலும்' (சு. 5 : 75; பாகவதம், 859). சந்திர சூரியர் சங்கு சக் கரங்களுக்கு: 'இருவேறு மண்டிலத் திலக்கம் போல, நேமியும் வளையு மேந்திய கையால்' (பரி. கங : 8-9); 'அழகொடு திருக்கைவளை திகிரிகளி னுப்புடைய வலர்கதி ரிரட்டை தருவோம்' (கூலோத். பிள்ளைத். முத்தப். 16); 'சங்கு திகிரி சந்த்ர சூரியர்' (தக்க. 700.) இரு சுடரேந்திய மேகம் திருமாலுக்கு: சிலப். கக : 41 - 51. பொன்மலைமேல் ஏறும் மேகம் : 208; 'பொன்மலை மேலெழுந்த மாமுகில் போன்றுளர் வந்து காணீர், அஞ்சிறைப் புள்ளுமொன் றேறி வந்தார்' (திவ்.) வருவ - வருதல்; தொழிற் பெயர்.

(பி - ம்.) [1] 'யேடலர்த்' (கஉ)

### யாவரும் திருமாலை இறைஞ்சி மகிழ்தல்

206. [1]எழுந்தனன் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடும்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் [2]களித்து லங்குவார்.

கறை மிடற்று இறை - உருத்திரன். கறையடி (பி - ம்.) - ஐராவதம். தேவு - பிரமதேவன்.

(பி - ம்.) [1] 'எழுந்தனர் கறையடிக் கிறையுந்' [2] 'களி துளங்கினார்' (கங)

207. ஆடினர் பாடின ரங்கு [1]மிங்குமாய்
ஓடின ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர்.

உவகை மாநறவு: 'உவகையின் னறவை யுண்டுணர்கிலார்' (சு. 2 : 143); 'காதலென் றதுவுமோர் கள்ளிற் றோன்றிற்றே' (சு. 35 : 253.) விம்மல் - மகிழ்ச்சி. ஒப்பு : 299 ; சு. 2 : 143.

(பி - ம்.) [1] 'மிங்குநின் றேடினார்' (கச)

### திருமால் ஓர் ஆசனத்தில் அமர்தல்

208. பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற
என்னையா ளுடையவன் றோணின் றெம்பிரான்
சென்னிவான் றடவுமண் டபத்திற் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினான்.

என்னை யாளுடையவன் : கம்பர் மதம். இங்கே கருடாழ்வாரை யென்னை யாளுடையவன் என்றார். (கரு)

### யாவரும் அரக்கரது கொடுமையை விண்ணப்பித்தல்

209. விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந் தயலி ருந்துழிக்
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறுவார்.

கூறினவர் சிவபெருமானும் பிரமனும்' (ஓர் உரை.) (கசு)

210. ஐயிரு தலையினோ [1]னனுச னாதியாம்
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ [2]மிழந்தன திருவி னாயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினார்.

அனுசன் - தம்பி ; கும்பகர்ணன்.

(பி - ம்.) [1] 'னனுசராதியா' [2] 'மிழந்ததும்'

இதன்பின்,

'வானவ ரம்முறை வழங்க மாமதி
தேனுறு மிதழியந் தெரியல் வேணியான்
ஆனவர் தமைக்கர மமைத்தங் கையினைத்
தான்முக நோக்கியே சாற்றன் மேயினான்' (கஎ)

என்ற செய்யுள் ஒரு பிரதியில் உள்ளது.

211. [1]எங்கணீன் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குழு வுலகையும் புடைத்த ழித்தனர்
செங்கணு யகவினித் [2]தீர்த்தி யில்லையேல்
றுங்குவ [3]ருலகெலா மொடியி னென்றனர்.

தீர்த்தி - தீர்ப்பாய். றுங்குவர் - விழுங்குவர் ; 54.

(பி - ம்.) [1] 'எங்கணால்' [2] 'தீர்த்தலில்' [3] 'ருலகையோர்' (கஅ)

## திருமால் அபயம் அளித்தல்

212. [1]என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலந் துளவினுன் வருந்தல் [2]வஞ்சகன்
தன்றலை யறுத்திடர் தணிப்பன் முரணிக்
கொன்றுநீர் கேண்மென வுரைத்தன் மேயினுன்.

வருந்தல் : வியங்கோள். (வஞ்சகர் தன்றலை (பி - ம்.) யென்றதில், ஒருமை பன்மை பயக்கம்.)

(பி - ம்.) [1] 'என்றபின் னமரர்க ளிறைஞ்சி' [2] 'வஞ்சகர்' (கசு)

## திருமால் கூற்று

213. வானுளோ ரனைவரும் வான ரங்களாக்
கானினும் வரையினுங் கடித டத்தினும்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னுழியான்.

கடிதடம் - காவலையுடைய உயர்ந்த இடம் (மலைப்பக்கம்.) (உ0)

214. மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாம்
கசரத [1]துரகமாட் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதுந் தாரணி.

மசரதம் அனையவர் - கானல் நீரைப் போன்ற அரக்கர். நிசரதகணை : நிசம் - சத்தியமாகிய. ரதம் - ரத்தம் என்பதன் இடைக்குறை ; இலக்குத் தவறாத இரத்தம் படிந்த கணை. (மசரதம் - பேய்த்தேர். ரதகணை - பாவ

காரிகள் ஊனுண்டு இனிமை கண்ட கணை). கசரத..... காவலான் : 812. ஆள் - காலாள். ஆட்கடல் - ‘இவுளிக்கடல்’ (சீவக. 28.)

(பி - ம்.) [1] ‘துரகமாக் கடல்’ (உக)

215. வளையொடு திகிரியும் [1]வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
[2]இளையவ ரெனவடி பரவ வேகிநாம்
வளமதி லயோத்தியில் வருது மென்றனன்.

திருமாலே நான்கு பாகங்களாகப் பிரிந்து அவதாரம் செய்தனரென்பது வான்மீகம். வடவைதீதர - வடவா முகாக்கினியும் தீயும்படி. பாயல் - ஆதிசேடன்

(பி - ம்.) [1] ‘வடவை தீர்தர’, ‘வடவைத் தீத்தர’, ‘வடவைத் தீயென’ [2] ‘இளையர்களென’ (உஉ)

## எல்லோரும் மகிழ்தல்

216. என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினார்
நன்றிகொண் மங்கல நாதம் பாடினார்
மன்றலஞ் செழுந்துள வணியு மாயனார்
இன்றெமை யளித்தன ரென்னு மேம்பலால்.

ஏம்பல் - மகிழ்ச்சி. (உ௩)

## வேறு

217. போயதெம் பொருமலென்னா
விந்திர னுவகை பூத்தான்
தூயமா மலரு ளோனுஞ்
சுடர்மதி சூடி னானும்
சேயுயர் விசும்பு ளோருந்
தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்
மாயிரு ஞால முண்டோன்
கலுழன்மேற் சரணம் வைத்தான்.

பொருமல் - துக்கம். சிறுமை - துன்பம். (உ௪)

### திருமால் எழுந்துபோனபின் தேவர்கள் தாம் தாம் எவ்விதம் அவதரிப்பார்கள் என்பதைத் தெரிவித்தல்

218. *என்னையா ளுடைய வையன்*
*கழுழன்மே லெழுந்து போய*
*பின்னர்வா னவரை நோக்கிப்*
*பிதாமகன் பேசு கின்றான்*
*முன்னரே யெண்கின் வேந்தன்*
*யானென [1]மூடுகி னன்மற்*
*றன்னவா றெவரு நீர்போ*
*யவதரித் திடுமி னென்றான்.*

என்னை யாளுடைய ஐயன்; 320, 324, 487. பிதாமகன் - பிரமதேவர். எண்கின் வேந்தன் - கரடி முகத்தோடு கூடிய ஜாம்பவான். பிரமதேவரின் கொட்டாவியிற் றோன்றினனென்று வான்மீகி இவனைக் கூறுவர்.

(பி - ம்.) ''மொழிகின் றன்மற்' (உரு)

219. *தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனது கூறு*
*மருவலர்க் கசனி யன்ன வாலியு மகனு மென்ன*
*இரவிமற் றெனது கூறுங் கவற்கிளை யவனென் றோத*
*அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானால்.*

அசனி - இடி. மகன் - அங்கதன். அங்கவற்கு - வாலிக்கு. ரிக்ஷராஜனி என்ற வானரன் ஒரு மடுவில் மூழ்கிப் பெண் ஆனான்; அப்பெண்ணை இந்திரனும் சூரியனும் காமுறப் பிறந்தவர்கள் வாலியும் சுக்கிரீவனும் என்பர். இந்திரன், 'நான் அங்கதனாகவும் பிறக்கிறேன்' என்றது வான்மீகத்தில் இல்லை. அரி - அக்கினிதேவன். (உசு)

220. *வாயுமற் றெனது கூறு*
*மாருதி யென்ன மற்றோர்*
*காயுமற் கடங்க ளாகிக்*
*காசினி யதனின் மீது*
*போயிடத் துணிந்தோ மென்றார்*
*புராரிமற் [1]றியானுங் காற்றின்*
*சேயெனப் புகன்றான் மற்றைத்*
*திசையுளோர்க் கவதி யுண்டோ.*

புராரி - சிவபெருமான். அனுமான் உருத்திராம்ச மென்பர். சிவ பெருமான், 'நானே அனுமனுவேன்' என்று சொன்ன செய்தி வான்மீகத்தி லில்லை. அவதி - எல்லை.

(பி - ம்.) [1] 'றியானே வாதசேய்' (உ௭)

### தேவர்களின் அவதாரமும் யாவரும் தம் இருக்கை சேறலும்

221. அருடரு கமலக் கண்ண னருண்முறை யலரு ளோனும்
இருடரு மிடற்றி னேனு மமரரு மினைய ராகி
மருடரு [1]வனத்தின் மண்ணின் வானர ராகி வந்தார்
பொருடரு [2]மெவருந் தத்த முறைவிடஞ் சென்று புக்கார்.

கமலக்கண்ணன் - திருமால். மருள்தரு - மயக்கத்தைத் தருகின்ற. பொருடரு மெவரும் : 245.

(பி - ம்.) [1] 'மனத்தின்' [2] 'மிறைவர் தத்தம்', 'மிருவர் தத்தம்' (உ௮)

### சிறந்த புதல்வரைப் பெறும் உபாயத்தை வசிட்டர் தசரதனுக்குக் கூறுதல்

222. ஈதுமுன் னிகழ்ந்த வண்ண
மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண்
மன்னநீ வருந்த லேழ்
பூதல [1]முழுதுந் தாங்கும்
புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற [2]முயலி னைய
சிந்தைநோய் தீரு மென்றான்.

ஈதுமுன் நிகழ்ந்த வண்ணம் : 'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்' (563.) மாதிரம் - மலை. பூதலம் என்றது உலகமென்னும் துணையாய் நின்றது. பதினுலலகும் அளிக்கும் புதல்வர்த்தரும் மகம்; 275, 742; இது புத்திர காமேஷ்டியென்பது.

(பி - ம்.) [1] 'முழுதுங் காக்கும்' [2] 'முதலி துன்றன்' (உ௯)

### மேற்கோண்டு செய்யவேண்டியவற்றை மன்னன் வேண்டல்

223. என்னமா முனிவன் கூற
வெழுந்துபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த
மாமுனி சரணஞ் சூடி
உன்னையே புகல்புக் கேனுக்
குறுகண்வந் தடைவ துண்டோ
அன்னதற் கடியேன் செய்யும்
[1]பணியினை யளித்தி யென்றான்.

உறுகண் - துன்பம். 'திருவவதாரப் படலம் முற்றும்' ஒரு பிரதி.

(பி - ம்.) [1] 'பணியினி தளித்தி' (௩௦)

### கலைக்கோட்டு முனியைக் கொண்டு யாகம் செய்தால் மைந்தர் உளராவர் என்று முனிவர் கூறல்

224. மாசறு [1]சுரர்க ளோடு
மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன்
விபாண்டகன் கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற் கொத்தோ
னிருங்கலை பிறவு மெண்ணிற்
றேசுடைத் தந்தை யொப்பான்
றிருவருள் புனைந்த மைந்தன்.

இது முதல் 'உலப்பில் பல்லாண்டு' (274) வரையில் கலைக்கோட்டு முனி படலம் என்று ஒரு பிரதியிற் காணப்படுகிறது. கலைக்கோட்டு முனிவரின் வரலாற்றைச் சுமந்திரர் கூறுவதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) [1] 'சுரரி னோடு' (௩௧)

225. [1]வருகலை யறிவு நீதி
மனுநெறி [2]வரம்பு வாய்மை
தருகலை மறையு மெண்ணிற்
சதுமுகற் குவமை சான்றோன்

திருகலை யுடைய விந்தச்
செகத்துளோர் தன்மை தேரா
ஒருகலை [3]முகத்துச் சிங்க
வுயர்தவன் வருதல் வேண்டும்.

திருகலையுடைய செகம்; திருகு - மாறுபாடு; பாயிரம், 1. சிங்கம் - சிருங்கம். உயர்தவன் : 264.

(பி - ம்.) [1] 'வருகலை பிறவு' [2] 'யாவும் வாய்மை' [3] 'முகச்சிருங்க வுயர்' (கஉ)

226. பாந்தளின் மகுட கோடி
பரித்தபா ரிதனின் வைகும்
மாந்தர்கள் விலங்கென் றுன்னு
மனத்தன்மா தவத்தி னெண்ணிற்
பூந்தவி சுகந்து ளோனும்
புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனல் வேள்வி [1]முற்றிற்
றனையர்க ளுளரா மென்றான்.

மாந்தரை விலங்கென்று உள்ளல் : 230, 233. மாதரை விலங்கென்று உள்ளல் : 233 ; 739.

(பி - ம்.) [1] 'முற்றத்தனையர்க' (கங)

அம்முனிவரைக் கோணரும் விதத்தை மன்னன் வினுதல்

227. ஆங்குரை யினைய கூறு
மருந்தவர்க் கரசன் செய்ய
பூங்கழ றொழுது வாழ்த்திப்
பூதல மன்னர் மன்னன்
தீங்கறு குணத்தான் மிக்க
செழுந்தவன் யாண்டை யுள்ளான்
ஈங்கியான் [1]கொணருந் தன்மை
யியம்புதி யிறைவ வென்றான்.

அருந்தவர்க்கரசன் - வசிட்டமுனிவர். செழுந்தவன்; செழுமை - மிகுதி.

(பி - ம்.) [1] 'புரியுந் தன்மை யருளிதி' (கச)

(கவி 248 முடியக் கலைக்கோட்டு முனிவரின் வரலாறு)

வேறு

### உரோமபதன் இயல்பு

228. [1]புத்தான கொடுவினையோ டருந்துயரம்
போயொளிப்பப் புவனந் தாங்கும்
[2]சத்தான குணமுடையோன் [3]றயையோடுந்
தண்ணளியின் சாலை போல்வான்
[4]எத்தாலும் வெலற்கரியான் மனுகுலத்தே
வந்துதித்தோ னிலங்கு மௌலி
உத்தான பாதனரு ளுரோமபத
னென்றுளனிவ் வுலகை யாள்வோன்.

புத்தான கொடுவினை - புத் என்னும் நரகம் செல்லுதற்குக் காரணமான கொடிய தீவினை. 'யார்க்கும், புத்தீர்த்திட் டலையாமற் புலவர்நா டுதவுவது புனிதமான, அத்தீர்த்தம்' (சு. 10 : 21.) சத்தான குணம்; (சத்து - ஞானம்.) தயை - அன்பு. அளி - அருள் ; 'அருளென்னு மன்பீன் குழவி' (குறள், 757.) தண்ணளியின் சாலை - குளிர்ந்த கருணையின் உறைவிடம். எத்தாலும் - எதனாலும் ; உபாயங்கள் நான்கனுள் ஒன்றானும். மனு - சுவாயம்புவ மனு. உரோமபதன் ஆண்டது அங்கநாடென்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) [1] 'புத்தாய' [2] 'சத்தாய' [3] 'றயாவோடுந்,' 'றயையினொடுந்' [4] 'எத்தாலும்' (கடு)

### மழை பெய்யும் வகை நாடிய உரோமபதனுக்கு முனிவர்கள் கூறுதல்

229. அன்னவன்றன் புரந்தளிக்குந் திருநாட்டு
ணெடுங்கால மறவ தாக
மின்னியெழு முகிலின்றி வெந்துயரம்
பெருகுதலும் வேத நன்னூல்
மன்னுமுனி வரையழைத்து மாதானம்
[1]கொடுக்கவும்வான் வழங்கா தாகப்
[2]பின்னுமறை யவர்க்கேட்பக் கலைக்கோட்டு
முனிவரின்வான் பிலிற்று மென்றார்.

மன்னும் - நிலைபெற்ற. பிலிற்றும் - துளிக்கும்.

(பி - ம்.) [1] 'கொடுத்தலும்வான்' [2] பின்னுமுனி வரர்க் கேட்ப' (கசு)

வேசையர் கலைக்கோட்டு முனிவரை அழைத்து வருவோம் எனல்

230. ஓதநெடுங் கடலாடை யுலகினில்வாழ்
மனிதர்விலங் கெனவே யுன்னும்
கோதில்குணத் தருந்தவனைக் கொணரும்வகை
யாவதெனக் குணிக்கும் வேலை
சோதிநுதற் கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த்
தரளநகைத் துணைமென் கொங்கை
மாதரெழுந் தியாமேகி யருந்தவனைக்
கொணர்துமென வணக்கஞ் செய்தார்.

மனிதரை விலங்கென்று உன்னுதல்: 226, குறிப். மாதர் - இவர் பரத்தையர்; 739. (௬௭)

வேசையர் உரோமபதனிடம் விடை பெற்றுச் செல்லல்

231. ஆங்கவரம் மொழியுரைப்ப வரசன்மகிழ்ந்
தவர்க்கணிதூ சாதி யாய
பாங்குளமற் [1]றவையருளிப் பணிப்பிறையைப்
பழித்தநுதற் பணைத்த வேய்த்தோள்
ஏங்குமிடை தடிக்குமுலை யிருண்டகுழன்
மருண்டவிழி யிலவச் செவ்வாய்ப்
பூங்கொடியீ ரேகுமெனத் தொழுதிறைஞ்சி
யிரதமிசைப் போயி னாரே.

ஆயவற்றையும், மற்றவற்றையும். பாங்கு - நன்மை. பணைத்த - பெருத்த. ஏங்கும்- வருந்தும். தொழுதிறைஞ்சல் மகளிர் தொழில்.

(பி - ம்.) [1] 'றவர்க் களித்துப்' (௬௮)

வேறு

வேசையரின் செயலும் கலைக்கோட்டு முனிவர் அவர்கள் வசமாதலும்

232. ஓசனை பலகடந் தினியோ ரோசனை
ஏசறு தவனுறை யிடமி தென்றுழிப்
பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
தாசறு மருந்தவத் தவரின் வைகினார்.

ஓசனை - பத்து நாழிகை வழி என்பர்; வடமொழிச் சிதைவு; 241; சீவக. 98; 953. ஏசு - இழ்ச்சி. ஆசு - குற்றம். அருந்தவஞ் செய்பவரைப் போல. (௩௯)

233. அருந்தவன் றந்தையை யற்ற நோக்கியே
கருந்தடங் கண்ணியர் கலைவல் லாளனிற்
பொருந்தினர் [1]பொருந்துபு விலங்கெ னுப்புரிந்
திருந்தவ ரிவரென வினைய செய்தனன்.

அற்றம் - சமயம்; 557. விலங்கெனுப் புரிந்து - விலங்கென்று பிறர் கருதும்படி. தவஞ் செய்து; 'முசுக்குல மனையமெய்ம் முனிவர்' (வி. பா. குருகுலச். 65.) பொருந்தின மகளிர், தாங்கள் 'மார்பினிற் கோடு பூத்த செறிதவ முனிவ ரென்ன முனிவனை மயக்கம்' செய்ததாகக் கூர்ம புராணம் கூறும்; இராமனவதரித்த. 5.

(பி - ம்.) [1] 'பொருந்தவும்', 'பொருநதுழி' (௪0)

234. அருக்கிய முதலினோ டாச னங்கொடுத்
திருக்கென [1]விருந்துபி னினிய கூறிய
முருக்கிதழ் மடந்தையர் முனிவ னைத்தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப் [2]புரையுட் புக்கனர்.

அருக்கிய முதலியன: 247. புரை - ஒருகுடிசை.

(பி - ம்.) [1] 'விருந்தபி னினிய கூறலும்' [2] 'புரைகள்' (௪௧)

235. திருந்திழை யவர்சில தினங்க டர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
[1]தருங்கனி பலவொடு தாழை யின்கனி
அருந்தவ வருந்தென வருந்தி னனரோ.

இனியன - இனிய சிற்றுண்டிகள். வருக்கை - பலா. மாத்தருங்கனி - மாம்பழம். தாழை - தென்னை. தாழையின்கனி - தேங்காய்; தெங்கம்பழம் என்று நூல்களிற் குறிக்கப்படும்.

(பி - ம்.) [1] 'தருத்தருங் கனியொடு தாழை யின்பலம்' (௪௨)

முனிவரை வேசையர் உரோமபதன் நாட்டுக்கு அழைத்துப்போதல்

236. இன்னன பலபக விருந்த பின்றிரு
நன்னுதன் மடந்தையர் நவையின் மாதவன்

தன்னையெம் மிடத்தினுஞ் சார்தல் வேண்டுமென்
றன்னவர் தொழுதலு மவரொ டேகினான்.

நவை இல் - குற்றமில்லாத. (உரு)

237. விம்முறு மூவகையர் வியந்த நெஞ்சினர்
[1]அம்மவிவ் விதுவென வகலு நீணெறி
செம்மைய முனிவரன் றொடரச் சென்றனர்
தம்மன மெனமருட் டையலார்களே.

அம்ம: ஆச்சரியக் குறிப்பு. இவ்விது - இந்த இது. என - என்று அம்மகளிர் கூற. மருள்தையலார் - மயக்கத்தையுடைய பரத்தையர்.

(பி - ம்.) [1] 'அம்மவி திதுவென,' 'அம்மவீ திதுவென' (உஎ)

மழை பொழிந்து வளன் சுரத்தல்

238. வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி [1]வான்மிசைச்
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைக டரவே.

வானவன் - சிவன். களன் அமர்கடு - மிடற்றில் அமைந்த விடம்.

(பி - ம்.) [1] 'வான்முகில்' (உஅ)

239. பெரும்புன னதிகளுங் குளனும் பெட்பறக்
கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிட
இரும்புயல் ககனமீ திடைவி டாதெழுந்
தரும்புனல் [1]சொரிந்தபோ தரசு ணர்ந்தனன்.

பெட்பு அற - ஆசைதீர. கரும்பும் நெல்லும் சேர்த்துக் கூறப்படுதல்: நான்மணி. 11; பு. வெ. 56.

(பி - ம்.) [1] 'சொரிதர வரசு' (உகூ)

அரசனது நினைப்பு

240. காமமும் வெகுளியுங் [1]களிப்புங் கைத்தவக்
கோமுனி யிவணடைந் தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத் தரள வாணகைத்
தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்.

களிப்பு - மயக்கம். காமம் வெகுளி மயக்கம்: 'காமம் வெகுளி மயக்க மிவை.......நோய்' (குறள், 360.) கைத்த - வெறுத்த. தூம மென் கூந்தல் - புகை யூட்டிய கூந்தல்; 281; 'அகிலி னுவி தேக்கிடுங் குழல்' (சீவக. 2495.) சூழ்ச்சி - வஞ்சனை.

(பி - ம்.) [1] 'களவுங் கைத்தெழு' (சஎ)

## உரோமபதன் செயல்

241. என்றெழுந் தருமறை முனிவர் யாரொடும்
சென்றிரண் டோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினான்.

மாதவக் குன்று: 'குன்றன்னார் குன்ற மதிப்பின்' (குறள், 898.) யாரொடும் - எல்லாரோடும். குவவு - திரட்சி. (சஅ)

242. வீழ்ந்தன னடிமிசை விழிக ணீர்தர
வாழ்ந்தன னினியென மகிழுஞ் சிந்தையான்
தாழ்ந்தெழு மாதரார் தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனதிடர் புணர்ப்பினா லென்றான்.

வீழ்ந்தனன் - அடியற்ற மரம்போல் வீழ்ந்தான். இடர்: 263. புணர்ப்பு - சூழ்ச்சி. (சகூ)

## கலைக்கோட்டு முனிவரின் வெகுளியும் தணிவும்

243. அரசரு முனிவரு மடைந்த வாயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலாற்
கரையெறி யாதலை கடலும் போன்றனன்.

மாலை - சமயம்; காலைபோல. கரை யெறியாத கடல்: 'ஏற்றந் தொடங்காக் கடலிற்றணி வெய்தி நின்றான்' (உ-4: 141.) (ருo)

244. [1]வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
எள்ளறு முனிவனை யிறைஞ்சி யாரினும்
தள்ளருந் துயரமுஞ் சமைவுஞ் சாற்றலும்
[2]உள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

வள் - கூர்மை. சமைவு - இல்லையாதல், ஒழிவு; 'தானையு முலந்த தைவர் தலைவருஞ் சமைந்தார்' (நி. 10 : 67); 'எப்புடவியுஞ் சமைய வந்து தகர', 'வசுக்களைத் தழுவிச் சமைத்தே' (தக்க. 398, 483.) இக்கவி சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) [1] 'வள்ளுறை' [2] 'உள்ளுறை' (சுக)

## முனிவரை அரண்மனை அழைத்துப்போய் மன்னன் செய்த உபசாரம்

245. அருள்சுரந் தரசனுக் காசி யுங்கொடுத்
துருடரு தேரின்மே லொல்லை யேறினன்
பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன்.

பொருடருமுனி : 221 ; பொருள் - அருளும் தருமமும். (சுஉ)

246. அடைந்தனன் வளநக ரலங்க ரித்தெதிர்
மிடைந்திட முனியொடும் வேந்தன் கோயில்புக்
கொடுங்கலில் பொற்குழாத் துறையு ளெய்தியோர்
மடங்கலா சனத்தின்மேன் முனியை வைத்தனன்.

ஒடுங்கல் இல் - விசாலமான. பொற்குழாத்து உறையுள்; குழாம் - திரட்சி; 'தெவ்வர் தந்த நீணிதி சேர்ந்த செம்பொன் மாடமும்' (சீவக. 153.) (சுஙு)

247. அருக்கிய முதலிய கடன்க ளாற்றிவே
றுரைக்குவ [1]திலதென வுவந்து தானருள்
[2]முருக்கிதழ்ச் சாந்தையா முகந லாடனை
இருக்கொடு விதிமுறை யினிதி னீந்தனன்.

அருள் - பெற்றெடுத்த. முருக்கு - முள் முருங்கை. நலாள் தனை. இருக்கு - வேதமந்திரம்.

(பி - ம்.) [1] 'இல்லென' [2] 'முருக்கித ழிளமுலை முக' (சுச)

## நாடு நல முறுதல்.

248. வறுமைநோய் தணிதர வான்வ ழங்கவே
உறுதுயர் [1]தவிர்ந்ததவ் வுலகம் வேந்தருள்

செறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனுண் டிருக்குக னரச வென்றனன்.

அவ்வுலகம் - அந்நாடு; உலகின் கூறுகளையும் உலகமென்றல் மரபு; 253; தொல். அகத். சூ. 5. என்றவர் வசிட்டர்.

(பி - ம்.) [1] 'தணிந்ததவ்' (ருரு)

வேறு

கலைக்கோட்டு முனிவரை அழைத்துவரத் தசரதன் பயணம் ஆதல்

249. என்றலுமே முனிவரன்ற னடியிறைஞ்சி
மீண்டேகிக் கொணர்வ னென்னுத்
துன்றுகழல் முடிவேந்த ரடிபோற்றச்
சுமந்திரனே [1]முதலா வுள்ள
வன்றிறல்சே [2]ரமைச்சர்தொழ மாமணித்தே
ரேறுதலும் வானோர் வாழ்த்தி
இன்றெமது வினைமுடிந்த தெனச்சொரிந்தார்
மலர்மாரி யிடைவி டாமல்.

முனிவரன் தன் - வசிட்ட முனிவருடைய. வினை - தீவினை.

(பி - ம்.) [1] 'முதல்வராய' [2] 'ரமைச்சரொடு' (ருசு)

250. காகளமும் பல்லியமுங் கனைகடலின்
மிகமுழங்கக் கானம் பாட
மாகதர்க ளருமறைநூல் வேதியர்கள்
வாழ்த்தெடுப்ப மதுரச் செவ்வாய்த்
தோகையர்பல் லாண்டிசைப்பக் கடற்றுனை
புடைசூழச் சுடரோ னென்ன
[1]ஏகியருந் தவரொடும்போ யுரோமபதன்
றிருநாட்டை யெதிர்ந்தா னன்றே.

சின்ன மென்னும் வாத்தியம். பல்லியம் - பலவித வாத்தியங்கள். மாகதர்கள் கானம் பாட: 251; மாகதர் - இருந்து ஏத்துவார். மகளிர் பல்லாண்டு இசைத்தல்: 254, 893, 1202, 1336.

(பி - ம்.) [1] 'ஏகியரு நெறிநீங்கி' (ருஎ)

## உரோமபதன் தசரதனை எதிர்கொண்டு செய்த உபசாரம்

251. கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்த
 னடைந்தமைசென் றொற்றர் கூறக்
கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை,
 புடைசூழக் கழற்கால் வேந்தன்
செழுந்தோடும் பலகலனும் வெயில்வீச
 மாகதர்கள் திரண்டு [1]வாழ்த்த
எழுந்தோடு மூவகையொடு மோசனைசென்
 றனரசை யெதிர்கோ ளெண்ணி.

கீர்த்தியின் கொழுந்து: 1201. கழுந்து: தனியன், 10, அடிக். தோடு - ஆடவரின் காதணி; 'தோடுடைய செவியன்' (தே. திருஞா.)

(பி - ம்.) [1] 'பாட' (௫௮)

252. எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன்
 றனைக்கண்ணுற் றெழிலி நாண
அதிர்கின்ற பொலந்தேர்நின் றரசர்பிரா
 னிழிந்துழிச்சென் றடியின் வீழ
முதிர்கின்ற பெருங்காத றழைத்தோங்க
 வெடுத்திறுக முயங்க லோடும்
கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கி
 யிவையுரைத்தான் களிப்பின் மிக்கான்.

பொலந்தேர் - பொற்றேர். அடிவீழ்ந்தவன் உரோமபதன். முயங்குதல் - தழுவுதல். உரைத்தவன் உரோமபதன். (௫௯)

253. யான்செய்த மாதவமோ விவ்வுலகஞ்
 செய்தவமோ யாதோ விங்ஙன்
வான்செய்த சுடர்வேலோ யடைந்ததெனா
 [1]மிகமகிழா மணித்தே ரேற்றித்
தேன்செய்த தார்மவுலித் தேர்வேந்தைச்
 செழுநகரிற் கொணர்ந்தான் றெவ்வர்
ஊன்செய்த சுடர்வடிவே லுரோமபத
 னெனவுரைக்கு முரவுத் தோளான்.

யான் செய்த மாதவம்: 333. உலகம் - உரோமபதன் நாடு; 653.

(பி - ம்.) [1] 'மனமகிழ்ந்து' (௬௦)

254. ஆடகப்பொற் சுடரிமைக்கு மணிமாடத்
திடையோர்மண் டபத்தை யண்மிப்
பாடகச்செம் பதுமமலர்ப் பாவையர்பல்
லாண்டிசைப்பப் பைம்பொற் பீடத்
தேடுதுற்ற வடிவேலோன் றனையிருத்திக்
கடன்முறைகள் [1]யாவு நேர்ந்து
தோடுதுற்ற மலர்த்தாரான் விருந்தளிப்ப
வினிதுகந்தான் சுரர்நா டுகந்தான்.

ஆடகப் பொன்: நால்வகைப் பொன்னில் ஒன்று; மற்றவை கிளிச் சிறை, சாதரூபம், சாம்பூநதம். பாடகம் - காலணிகளில் ஒன்று. ஏடு துற்ற - இதழ்கள் நெருங்கிய. ஏடு - இதழ்; இது மலர்களுக்காகி அம்மலர்க ளாலான மாலைக்கு ஆகுபெயராயிற்று; வேலுக்கு மாலை அணிதல் வழக்கு. வடி - கூர்மை. தோடு - இதழ். சுரர்நா டுகந்தான்: 257, 335.

(பி - ம்.) [1]'யாவு மீந்து' (சுக)

முனிவரை அனுப்புவதாக உரோமபதன் கூறத் தசரதன் அயோத்தி மீளல்

255. [1]செவ்விநறுஞ் சாந்தளித்துத் தேர்வேந்தன்
றனைநோக்கி யிவணீ சேர்ந்த
கவ்வையுரைத் தருள்கியென நிகழ்ந்தபரி
சரசர்பிரான் கழற லோடும்
அவ்வியநீத் துயர்ந்தமனத் தருந்தவனைக்
கொணர்ந்தாங்கண் விடுப்ப னென்ற
செவ்விமுடி யோயெனலுந் தேரேறிச்
சேனையொடு மயோத்தி சேர்ந்தான்.

செவ்வி - அழகு. கவ்வை - காரியம்; சூ. 35: 198. பரிசு - விதத்தை. அவ்வியம் - பொறாமை.

(பி - ம்.) [1]'சவ்வி' (சுஉ)

உரோமபதன் முனிவரை உடன்படுத்தி அனுப்புதல்

256. மன்னர்பிரா னகன்றதற்பின் வயவேந்த
னருமறைநூல் வடிவு கொண்ட
தன்னமுனி வரனுறையு டனையணுகி
யிணையடித்தா மரைக ளம்பொன்

மன்னுமணி முடியணிந்து வரன்முறைசெய்
திடவிவணீ வருதற் கொத்த
தென்னையென வடியேற்கோர் [1]வரமருளு
மடிகளென யாவ தென்றான்.

வயவேந்தன் - உரோமபதன். மறை நூல் வடிவங்கொண்ட முனி: 259, 266, 269-70.

(பி - ம்.) [1] 'வரமருள்க வடிக' (சுரு)

257. புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
பெருந்தகைதன் புகழிற் பூத்த
வறனென்று திருமனத்தா னமரர்களுக்
கிடர்விளைக்கு மவுண ராயோர்
திறலுண்ட வடிவேலோன் றசரதனென்
றுயர்கீர்த்திச் செங்கோல் வேந்தன்
விறல்கொண்ட மணிமாடத் தயோத்திநக
ரடைந்திவணீ மீள்க வென்றான்.

புறவொன்றின்.....பெருந்தகை: 731; சு. 4: 110, 15: 355; புறநா. ருஎ: 5-6; சிலப். உ0: 52; விக். 11; குலோத். 17; இராசராச. 6, மணிமாடத்தயோத்தி: 334. (சுச)

258. அவ்வரந்தந் தனமினித்தேர் கொணர்தியென
வருந்தவத்தோ [1]னருள லோடும்
வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சுடர்வேலோ
னடியிறைஞ்சி வேந்தர் வேந்தன்
[2] கவ்வையொழித் துயர்ந்தனனென் றதிர்குரற்றேர்
கொணர்ந்தனனிக் கலைவல் லாளன்
செவ்விநுதற் றிருவினொடும் போந்தேறு
கெனவேறிச் சிறந்தான் மன்னோ.

அரந்தின்றயில் படைக்கும் சுடர்வேல்: 180; ரு. 12 : 2; 'வாளரந் துடைத்த வைவேல்' 'அரந்தினப் பிறந்த பைம்பொன்' (சீவக.

461, 1507.) அயில் - கூர்மை. கவ்வை - துன்பம். செவ்வி நுதற்றிரு : சாந்தை. 'முகநலாள்' (247.)

(பி - ம்.) [1] 'ஊறைத லோடும்' [2] 'கவ்வையொழிந்து' (௬௫)

வேறு

## முனிவரின் புறப்பாடு

259. குனிசிலை [1]யரசனுங் கரங்கள் கூப்பிடத்
துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை வடிவு போன்றொளிர்
முனிவனும் பொறிமிசை நெறியை முன்னினான்.

பொறி - தேர், இந்திரியங்கள் : சிலேடை. துனியறு - ஒருவருடனும் வெறுப்பில்லாத ; 'துனியில் காட்சி முனிவர்' (முருகு. 137.)

(பி - ம்.) [1] 'வயவனுங்' (௬௬)

## தேவர்களின் மகிழ்ச்சி

260. அந்தர துந்துமி முழக்கி யாய்மலர்
சிந்தினர் களித்தன [1]ரறத்திற் றேவரும்
வெந்தெழு [2]கொடும்பிணி [3]வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

மெய்ம் முதல் - பரம்பொருளாய இராமன். அறத்தின் - தருமம் களித்ததைப்போல. கொடும்பிணி - கொடிய பிறவிநோய்.

(பி - ம்.) [1] 'ரறமுந் தேவரும்' [2] 'கொடுவினை' [3] 'வீட்டு மெய்முதல்' (௬௭)

## தசரதன் மகிழ்ச்சி

261. தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னினர்
மாதிரம் பொருதகோண் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவர வோத வேந்தனும்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன்.

மாதிரம் - மலை ; மதுரைக். 10, ந. முனி வரவு ஓதினர். காதல் என்ற அளவறுகடல் : 'ஆயபே ரன்பெனு மளக்கர்' உ. 2 : 52. (௬௮)

### தசரதன் எதிர்கோளச் செல்லுதல்

262. எழுந்தனன் பொருக்கென விரத மேறினன்
பொழிந்தனர் மலர்மழை யாசி பூத்தன
மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னோடுமே.

மொழிந்தன பல்லியம் : 'புகன்ற தீங்குழல்' (சீவக. 1940) ; மிருதங்கம் வாசித்தல் என்பது வழக்கு. (சுகூ)

263. பிதிர்ந்ததென் மனத்துயர்ப் பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு [1]முரசுடை யரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை [2]முனியை யன்பினோ
டெதிர்ந்தனன் யோசனை யிரண்டொ டொன்றினே.

பிதிர்ந்தது - தூளாயது. துயர்ப் பிறங்கல் - துன்ப மலை. மூன்று யோசனைத் தூரத்தி னெதிர்ந்தனன்.

(பி . ம்.) [1] 'கடலுடை' [2] 'முனியைக் கண்களால்' (எo)

264. நற்றவ மனைத்துமோர் நவையி லாவுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய சீரையு முழையின் றோற்றமும்
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை.

நற்றவம் உருவெடுத்தல் : 651. நவை - குற்றம். சீரை - மரவுரி. உழை தோற்றம் : 225. மூர்த்தி - வடிவுடையவன். (எக)

265. அண்டர்க டியாரும் மரக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரு வினைவ லாளனைக்
குண்டிகை குடையொடுங் குலவு நூன்முறைத்
தண்டொடும் பொலிதரு தடக்கை யான்றனை.

1-2 : 744. குண்டிகை முதலியன : தொல். மரபு. சூ. 70 ; கலி. க : 1-4. நூல் முறை - நூல்களிற் கூறிய முறைப்படியே. முடிபு : எதிர்ந்தனன் 263, மூர்த்தியான்றனை 264, தடக்கையான்றனை 265. வினைமுற்றை முன் கூறிச் செய்யப்படுபொருளைப் பின் கூறுவது கம்பர் இயல்பு ; 198-9. (எஉ)

### கலைக்கோட்டு முனிவரின் ஆசியை மன்னன் பெறுதல்

266. இழிந்துபோ யிரதமாண் டிணைகொ டாண்மலர்
விழுந்தனன் வேந்தர்தம் [1]வேந்த னீதியான்
மொழிந்தன னுசிகண் முதிய நான்மறைக்
கொழுந்துமேற் படர்தரக் [2]கொழுகொம் பாயினான்.

நான் மறைக்கொழுந்து - நால் வேதமாகிய கொடியின் கொழுந்து.

(பி - ம்) [1] 'வேந்தன் மெய்ம்மையான்', 'வேந்தன் மேன்மையால்' [2] 'கொள் கொம் பாயினான்' (எக)

### மன்னன் முனிவரை அழைத்துப் போதல்

267. அயல்வரு முனிவரு மாசி கூறிடப்
[1] புயல்பொழி தடக்கையாற் றெழுது பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடுங் கலைவ லாளனை
இயல்பொடுங் கொணர்ந்தன னிரத மேற்றியே.

புயல் பொழி தடக்கை : 1, குறிப். கயல் பொருவிழி : சாந்தை ; பன்மொழித் தொடர்.

(பி - ம்.) [1] 'புயல்பொரு தடக்கையாற்', 'புயல்பொழி தரநதி பெருகு பொங்குநீர்க்' (எச)

268. அடிகுரன் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னோடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்தெ டுப்பவே.

அயோத்தி மாநகர் : மா : உலோகமா பால னென்பதிற்போல ; சீவக. 395 ந. வாழ்த்து - பல்லாண்டு. (எரு)

### வசிட்டர் சபைக்கு வருதல்

269. கசட்டறு வினைத்தொழிற் கள்வ ராயுழல்
அசட்டர்க ளைவரை [1]யறுவ ராக்கிய
வசிட்டனு மருமறை [2] வடிவு போன்றொளிர்
விசிட்டரும் வேத்தவை பொலிய மேவினார்.

கசடு - கீழ்மை. அசட்டர்கள் : 'அசட்டு வசிட்டன்' (தக்க. 488); 'அசட்டுருக்கள்' (திருப்புகழ், குறித்த மணிப்); 'சளத்திற் பிணிப்பட் டசட்டுக்ரியைக்குள்' (கந்தரலங். 7) ஐவர் - பஞ்சேந்திரியங்கள். அறுவர் - அற்றவர்; ஐவரை ஆறு போக்கிய என்பது வேறு பொருள். ஐவரை யகத்தடைத்துள (பி - ம்.) : 397. விசிட்டர் : விசிட்டம் - மேன்மை. வசிட் டன் - சிறந்த நல்லொழுக்கமுடையவன். (கசட்டுறுவினை - தீயவினை. அசட்டர் - பொல்லாதவர். விசிட்டர் பெரியோர்).

(பி - ம்.) [1] 'யகத்தடைத்துள' [2] 'வழக்கு நீங்கலா' (எசு)

## தசரதருடைய உபசாரமும் விண்ணப்பமும்

270. மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதி யோகிகர்
கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினன்.

மன்னி - அடைந்து. சுருதி - வேதம். ஏமுற - சந்தோஷிக்க. (எஎ)

271. சான்றவர் சான்றவ தரும மாதவம்
போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் றுமரோ.

சான்றவர் சான்றவ - பெரியோர்களுக்குப் பெரியோய். பூத்த - விளங்கிய. என் ஆன்ற. . . . . வைகுமால் : 196. இழப்பு இன்றும் - அழிதல் இல்லையாம். (எஅ)

## கலைக்கோட்டு முனிவரின் கூற்று

272. என்னலு முனிவர னினிது நோக்குறு
மன்னவர் மன்னகேள் வசிட்டன் றனெனும்
நன்னெடுந் தவன்றுணை நவையில் [1]செய்கைய
நின்னையிவ் வுலகினி னிருபர் நேர்வரோ.

துணை - துணையையுடைய. நேர்வரோ - ஒப்பாவரோ.

(பி - ம்.) 'செய்கைநீ', 'செய்கையாய்' (எகூ)

273. என்றிவை பலபல [1]வினிய கூறினன்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய்
நன்றிகொ [2]ளரிமக நடத்த வெண்ணியோ
இன்றெனை யழைத்ததிங் கியம்பு வாயென்றான்.

அரிமகம் - அசுவமேதம்.

(பா - ம்.) [1] 'வினிமை' [2] 'னருமக'

இதன் பின் சில பிரதிகளில் கீழ்வரும் பாட்டுக் காணப்படுகிறது. அப்பாட்டினடியில் 'கலைக்கோட்டு முனி படலம் முற்றும்' என்ற தொடரும் உள்ளது.

'எனக்கலை மாமுகச் சிருங்க னிவ்வுரை
தனைச்சொலத் தாணிபர்க் கரசன் றான்மகிழ்ந்
தனைத்துல குயிரொடு மறங்க ளுய்யத்தம்
மனத்துய ரகன்றிட வணங்கிக் கூறுவான்.' (அ0)

## தனக்கு மைந்தருண்டாக அருளும்படி மன்னன் வேண்டல்

274. உலப்பில்பல் லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினேன் றனையர் வந்திலர்
அலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்க வேண்டுமால்.

உலப்பு - ஒழிவு. அலப்பு நீர் : வலித்தல் விகாரம்; அலம்பல் - ஆரவாரித்தல். (அக)

ஒரு பிரதியில் இது முதல் திருவவதாரப்படலம்.

## புத்திர காமேஷ்டிக்கு எழும்படி முனிவர் கூறுதல்

275. என்றலு மரசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தரை யளிக்கு மாமகம்
இன்றுநீ யியற்றுதற் கெழுக வீண்டென்றான்.

ஈரேழு உலகமும் ஓம்பிடும் மைந்தரை அளிக்கும் வேள்வி : 222, 741. மாமகம் - அசுவ மேதம்; அரிமகம், 273; வான்மீகமும் அசுவமேதயாகத்தைக் கூறும். (அஉ)

### வேள்விக்கு வேண்டுவனவற்றை மன்னன் சித்தம் செய்தல்

276. ஆயதற் குரியன கலப்பை யாவையும்
ஏயெனக் [1]கொணர்ந்தன னிருபர்க் கேந்தலும்
தூயநற் புனல்படிஇச் சுருதி நூன்முறை
சாய்வறத் திருத்தியே சாலை துன்னினான்.

கலப்பை - உபகரணங்கள் ; 'வரைமுதற் கலப்பைகள் மாடு நாட்டி' (சூ. 7. 97.) ; 'காசில் போகக் கலப்பை' (சீவக. 864.) ஏயென : 279.

(பி - ம்.) [1] 'கொணர்தலி னிருபர்க் கேந்தலைத்' (அக)

### யாகத்தின் நிகழ்ச்சி

277. முழங்கனன் மும்மையும் முடுகி யாகுதி
வழங்கியே யீரறு திங்கள் வாய்த்தபின்
றழங்கிய துந்துமி முழங்கத் தாவில்வான்
விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே.

அழன் மும்மை - மூன்று தீ ; 'நாற்சதுரமும் முச்சதுரமும் வில் வடிவு மாகிய மூன்று வகையைக் கருதின ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம்' (முருகு 181, ந.) ; 'மூன்று தீயாவன : ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்குத் தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ணவும்' (முருகு. 131, வேறுரை.) ஈராறுதிங்கள் - பன்னிரண்டு மாதம் ; பன்னிரண்டு மாதம் ஆகுதி செய்தல் பாபநிவிர்த்தியின் பொருட்டாம். அசுவமேதயாகம் ஒரு வருஷத்தில் செய்வது.

(பி - ம்.) [1] 'றழங்கின துந்துபி தாவில் வானகம்' (அஎ)

### முனிவர் கனலில் ஆகுதி வழங்கல்

278. முகமல ரொளிதர மொய்த்து வானுளோர்
[1]தொகைவிரி நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணே
மகவரு ளாகுதி வழங்கி னனரோ.

மகவருள் ஆகுதி : 285 ; புத்திரகாமேஷ்டி யாகம் ; ஒரு தினத்திற் செய்வது. தசரதன் அசுவமேதத்தையும் புத்திரகாமேஷ்டியையும் கலைக் கோட்டு முனிவரைக் கொண்டு செய்தான் ; 285.

(பி - ம்.) [1] 'அகவிரை' (அஅ)

### வேள்வித் தீயில் பூதத்தின் தோற்றம்

279. ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்று சூழ்
தீயெரி பங்கியுஞ் சிவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

பிண்டம்: இங்கு பிண்டமென்றது வெண் சோற்றுத் திரளை; 742. வான்மீகி பாயஸம் என்பர். தீ எரி - தீயைப்போல் எரிகின்ற. பங்கி - குடுமி. (அசு)

### பூதத்தின் மறைவும் கலைக்கோட்டு முனிவரின் கட்டளையும்

280. வைத்தது தரைமிசை மறித்து மவ்வழித்
தைத்தது பூதமத் தவனும் வேந்தனை
உய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினி லளித்தி யாலென்றான்.

தைத்தது - (திரும்பப் புகுந்தது). உய்த்த - சேர்த்த. உரிய மாதர் - பட்டத்தேவியர். பூதம் பாயஸத்தைத் தசரதன் கையில் கொடுத்ததாகவும் அப்போது அவனை நோக்கிச் சில சொற்கள் பேசியதாகவும் வான்மீகம் கூறும். (அஎ)

### மன்னன் கவுசலைக்கு ஒரு கூறு அளித்தல்

281. மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் [1]சுரிகுழற் றெண்டைத் தூயவாய்க்
[2] காமரொண் கவுசலை கரத்தி னோர்பகிர்
[3] தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ.

தூமமென் கருங்குழல்: 240, குறிப்பு. [காமுற (பி - ம்.) - விருப்ப முற.] சுரி குழல் - சுரிந்த கூந்தல். தாம் உற; தாம் - தாகம்; கலி. 12: 5, ந. 'தாஅம் படுநர்க்கு' (யா - வி. மேற்.) சங்கம் ஆர்த்தெழல் நன்னிமித் தமாகிப் பின் வரும் வெற்றியைக் குறிக்கும்.

(பி - ம்.) [1] 'கருங்குழற்' [2] 'காமுறக்' [3] 'தாமுறை யளித்தனன்' (அஅ)

### கைகேயிக்கு அளித்தல்

282. கைகயன் றனயைதன் கரத்து மம்முறை
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்

*பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்*
*வைகுறு கோசல மன்னர் மன்னனே.*

தேவாரார்த்தெழ : 297. பரதன் பூமியைத் தாங்கப் பிறந்தவன் என்ற குறிப்பை உட்கொண்டு, 'கோசல மன்னர் மன்னன்' என்றார். (அக)

## சுமித்திரைக்கு அளித்தல்

283. *நமித்திரர் நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை*
*நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையிற்*
*சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினிச்*
[1]*சமித்தனன் பகையென வமரர் சாற்றினர்.*

நமித்திரர் - பகைவர். நிமி - நிமி யென்னும் சக்கரவர்த்தி. சமித்தனன்- ஒழித்தனன். இலக்குமணன் இந்திரஜித்தைக் கொல்லப் பிறந்தவனாதல் பற்றி இந்திரனுக்கு மகிழ்ச்சி.

(பி - ம்.) [1] 'சமித்ததென் பகையெனத் தமரோ டார்ப்பவே' (கூ0)

## மீட்டும் சுமித்திரைக்கு அளித்தல்

284. *பின்னரப் பெருந்தகை பிதிர்ந்து* [1]*வீழ்ந்தது*
*தன்னையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினன்*
*ஒன்னலர்க் கிடமும்வே றுலகி னோங்கிய*
*மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.*

ஒன்னலர் - பகைவர். வலம் இடம் துள்ளினது ஆண்பாலார்க்கே; இடப்புறம் துள்ளல் தீமையைக் காட்டும் உற்பாதம்; வலம் துடித்தல் நன்மைக்கு அறிகுறி; பெண்களுக்கு இம் முறை வேறு; ரு. 3 : 32 - 5.

(பி - ம்.) [1] 'வீழ்ந்தவை' (கக)

## வேள்வியின் முடிவும் மன்னனது செயலும்

285. *வாம்பரி வேள்வியு* [1]*மகாரை நல்குவ*
[2]*தாம்புரை யாகுதி பிறவு மந்தணன்*
*ஓம்பிட முடித்தபி னுலகு காவலன்*
*ஏம்பலோ டெழுந்தனன் யாரு மேத்தவே.*

பரி வேள்வி - அசுவமேதம்; 273. புத்திரகாமேஷ்டி அசுவமேதம் இரண்டும் செய்தான் தசரதன். ஆகுதி: 278, 780, 1338. ஓம்பல் - பாதுகாத்தல். ஏம்பல் - மகிழ்ச்சி.

(பி - ம்.) [1] 'மகவை நல்குவ' [2] 'தாம்புரியாவுதி' (கஉ)

286. முருடொடு பல்லிய முழங்கி யார்த்தன
இருடரு முலகமு மிடரு நீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டர்ந்துழி
அருடரு மவையின்வந் தரச னெய்தினான்.

முருடு - பத்தல், மத்தளமுமாம்; ௩. 6 : 28; சிலப் க : 46, உரை. **அருள் தரும் அவை** - நல்லவை; அவை - சபை; 'காட்சிக் கெளியன்....... னிலம்' (குறள், 386.) (௬௩)

287. செய்ம்முறை [1]கடனவை திறம்ப லின்றியே
[2]மெய்ம்மறைக் கடவுளர்க் கீந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ டந்த ணாளர்க்கும்
கைம்முறை [3]வழங்கினன் கனக மாரியே.

கடவுளர் - முனிவர்; முனிவரைக் கடவுளென்றல்: மதுரைக். 41; கலி. ௬௩: 11-3; சிலப். கக : 5; பெருங். உ. 11.: 150, ச. 10 : 153; சீவக. 96, 1124. நீடல் - நிலைத்தல்.

(பி - ம்.) [1] 'கடன் முறை' [2] 'மெய்ம்முறை' [3] 'பொழிந்தனன்.' (௬௪)

288. வேந்தர்கட் கரசொடு வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் றுகிலொடு வரிசைக் கேற்பன
ஈந்தனன் பல்லியந் துவைப்ப வேகிநீர்
தோய்ந்தனன் சரயுநற் றுறைக்க ணெய்தியே.

வேந்தர் - தன்கீழுள்ள சிற்றரசர்கள். அரசு - ஆட்சி. நீர் தோய்ந்தனன்: யாக தீக்ஷை மேற்கொண்டவர் அந்த யாகத்தின் முடிவில் செய்யும் ஸ்நானம் இது; வடமொழியில் 'அவப்ருதம்' என்று வழங்கும். (௬௫)

289. [1]முரசொலி கறங்கிட முத்த வெண்குடை
[2]விரசிமே னிழற்றிட வேந்தர் சூழ்தர
அரசவை யடைந்துழி யயனு நாணுற
உரைசெறி முனிவர்தா ளிறைஞ்சி யோங்கினான்.

விரசல் - நெருங்கல். உரை செறி முனிவர்; உரை - சாபானுக்கிரகச் சொல்; செறிவு - நிறைவு.

(பி - ம்.) [1] 'முரசினங்' [2] 'விரசிடு நிழற்ற' (௬௬)

### மன்னன் கலைக்கோட்டு முனியை உபசரித்து அனுப்புதல்

290. அரியநற் றவமுடை வசிட்ட னாணையால்
இரலைநற் [1]சிருங்கனை யிறைவன் றாடொழா
[2]உரியநற் பலவுரை பயிற்றி யுய்ந்தனன்
பெரியநற் றவவினிப் பெறுவ தியாதென்றான்.

இறைவன் - தசரதன். தாள் தொழா. பயிற்றி - கூறி. உய்ந்தனன் - தன்யனானேன்.

(பி - ம்.) [1] 'சிருங்கமாவிறைவன்' [2] 'உரியபற்' (கள)

சில பிரதிகளில் இதன் பின் ஒரு பாட்டுக் காணப்படுகிறது. அது வருமாறு:

'எந்தைநின் னருளினா [1]லிடரு நீங்கியே
[2]உய்ந்தன னடியனென் றுரைப்ப வொண்டவன்
[3]சிந்தையின் மகிழ்ச்சியால் வாழ்த்தித் தேர்மிசை
வந்தமா தவரொடும் வழிக்கொண் டேகினான்.'

(பி - ம்.) [1] 'விடரி னீங்கியே' [2] 'உய்ந்தன னடியனே னென்ன வொண் டவன்' [3] 'சிந்தையுண்'

291. வாங்கிய துயருடை மன்னன் பின்னரும்
[1]பாங்குறு கடன்முறை பலப யிற்றல்கொண்
டோங்கிய [2]வுவகையி னாசி யோடெழா
[3]நீங்கின னிருந்தன னேமி வேந்தனே.

வாங்கிய துயர்: வடமொழி நடை. வாங்கிய - நீங்கின; 46. பாங்கு - நன்மை. பயிற்றல் - செய்தல்.

(பி - ம்.) [1] 'பாங்குடை முனிவர்தாள் பழிச்சி யேத்தல் கொண்' [2] 'வுவகைய ராசி' [3] 'நீங்கின ரிருந்தனன்' (கஅ)

### கோசலை முதலியவர்களின் சூற் பருவம்

292. தெரிவையர் மூவருஞ் சிறிது நாட்செலீ
மருவிய வயாவொடும் வருத்தந் துய்த்தவர்
பொருவருந் திருமுக மன்றிப் பொற்புநீ
டுருவமு மதியமோ டொப்பத் தோன்றினார்.

வயாவும் வருத்தமும்; வயவு - கருப்பமுற்றிருக்கையில் கொள்ளும் ஆசை; 'வயாவும் வருத்தமு மீன்றக்கா ளேவும், கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு' (நாலடி. 201.) உருவம் வெளுத்துப் போனமையின் 'மதியமோ டொப்ப' என்றார். சூல் கொண்ட மகளிரின் நலத்தொலைவு, சீவக. 231-ஆம் செய்யுளால் தெரியவரும். (கூக)

## ஸ்ரீ ராமர் ஜனனம்

293. ஆயிடைப் பருவம்வந் [1]தடைய மேடமும்
மாயிரும் [2]புவிமட மாதும் மாமதி
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்களும்
தூயகற் கடகமு மெழுந்து துள்ளவே.

பருவம்: தேவியர் கர்ப்பந் தரித்திருந்தது 12 மாத மென்பர் வான்மீகி. மேடம் - மேட மாதம்; சித்திரை. வேய் - புனர்பூசத்தின் பெயர்; வேய் புனர்பூசம்: இரு பெயரொட்டு; எதுகை நோக்கி இயல்பாயிற்று; மாமதி வேய் புனர்பூசம் - சந்திரனைத் தழுவிய புனர்பூசம். புனர்வசு இராமபிரான் திருவவதாரம் செய்த நட்சத்திரம். கற்கடகம் இலக்கினம்.

(பி - ம்.) [1] 'தடைந்த வெல்லையின்' [2] 'புவிமகண் மகிழ்வொ டோங்கிட' (௧௦௦)

294. சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டறும மோங்கவே.

வித்தகம் - அறிவுச் செல்வம்; 3. நித்தர் - நித்திய சூரிகள். சோதி: ஈண்டு திருமாலை, சோதி என்றமைக்கு ஏற்பப் பின் பாத இலக்குவ சத்ருக்கனர்களையும் ஒளி என்பர்; 310 - 12. (௧௦௧)

295. ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

ஒரு பகல் - பிரளய காலத்தில்; 'பொருளற் றிடமுற் றுறுமப் பகலில்' (உ. 4 : 32.) திரு - இகபர மோட்ச சாதனமாகிய செல்வம். (௧௦௨)

### பரதன் ஜனனம்

296. ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

ஆசை - திசைகள். விசும்பு - ஆகாயம். வாசவன் - இந்திரன். (கoரு)

### இலக்குவன் ஜனனம்

297. தளையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளையுமந் தரமிசைக் கெழுமி [1]யார்த்தெழ
அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற
[2]இளையவற் பயந்தன ளிளைய மென்கொடி.

சயிலகோபன் - மலைகளை வெகுண்டவன்; இந்திரன். கிளை - தேவர். அளைபுகும் என்பதனை அலவனுக்கும் கூட்டுக; சாதியடை. அரவு - ஆயிலியம். அலவன் - கற்கடகம். இளையவன் - இலக்குவன்.
(பி - ம்.) [1] 'யார்ப்புற' [2] 'இளையவள் பயந்தன ளிளைய வீரனை' (கoசு)

### சத்துருக்கனன் ஜனனம்

298. படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாண் மீட்டு மீன்றனள்.

பஃறலைப் பாந்தள் - ஆதிசேடன். பார் - பூமிதேவி. நடம் கிளர்தர - மகிழ. மறை நாடகம் நவில. மடங்கல் - சிங்கராசி. மகம் - ஒரு நட்சத்திரம். (கoஎ)

### தேவாதியரின் மகிழ்ச்சி

299. ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
ஓடின ருலாவின ரும்பர் முற்றுமே.

கின்னரர் பாடினர் ; கின்னரர் - பதினெண்கணத்துள் ஒரு பிரிவினர். விம்மல் - மகிழ்ச்சி. உம்பர் - நித்ய சூரிகள். பூ. திவ். 'வண்ண மாடங்கள்' (2.) (கoசு)

மக்கள் பிறந்தமையை அரசன் உணர்தல்
அந்தணாளர் நாளும் கோளும் நன்று எனல்

300. ஓடின ரரசன்மாட் டுவகை கூறிநின்
றாடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடுங் கோளு நின்றமை
நாடின [1]ருலகினி னவையின் றென்றனர்.

சிலதியர் - குறுந்தொழில் மகளிர் ; பெருங். க. 33 : 24 ; சீவக. 197. நாள் - இருபத்தேழு நட்சத்திரங்களுக்குப் பெயர். கோள் - கிரகங்கள்.

(பி - ம்.) [1] 'ருலகினி னவை' (கoஎ)

இக்கவிக்குப் பின் காணப்படும் அதிகப் பாடல்கள் :

(1) 'மேடமா மதிதிதி நவமி மீன்கழை
[1] நீடுநாண் மாலைகற் கடக நீதிசேர்
[2] ஓடைமா களிறனு னுதய ராசிகோள்
நாடினே காதசர் [3] நால்வ ருச்சரே.'

நால்வர் - சுக்கிரன், வியாழன், சனி, செவ்வாய் ; சூரியனையும் சேர்த்து ஐவர் என்பர் வான்மீகி.

(பி - ம்.) [1] 'நீடுநு' [2] 'ஆடவர்திலகனுதய' [3] 'உச்சர் நால்வரே'

(2) 'என்றனர் சாதக [1] மீசர்க் கேனையர்
தந்தமக் குந்தகு முறையிற் றூங்தெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினார்
வன்றிறற் சுரர்குரு வாழ்த்தெ டுப்பவே.'

ஈசன் - இராமன் ; 'ஆர்த்தவோசை ஈசனுண்ட வண்டமுற்று முண்டதே' (சு. 5 : 2.) தமனியத்து - பொன் ஓலையில்.

(பி - ம்.) [1] 'மிறைவர்க்'

தசரதன் குழந்தைகளின் முகத்தை நோக்குதல்

301. மாமுனி தன்னொடு மன்னர் மன்னவன்
ஏமுறு புனல்படீஇ வித்தொ டின்பொருள்

தாமுற வழங்கிவெண் சங்க மார்புறக்
கோமகார் திருமுகம் குறுகி நோக்கினன்.

மாமுனி. . . . . நோக்கினன் : 'சிறப்பாவன பிறந்த புதல்வன் முகங் காண்டலும்' (தொல். கற்பு. 5, ந.) ; 'செறுவர் நோக்கிய கண்தன் சிறு வனை நோக்கியுஞ் சிவப்பா னவே' (புறநா. ௧௦௦ : 10-11.)

இதன்பின் அதிகப்பாடல் ஒன்று : (௧௦அ)

'நோக்கினன் களிப்பெழ நுணங்கு கேள்விநூல்
ஆக்கிய முனிவனை வணங்கி யையவென்
பாக்கியம் பலித்ததிப் பால னென்றுபார்
காக்குறு மாசனுங் கழறன் மேயினன்.'

முரசறையுமாறு அரசன் இட்ட கட்டளை

302. இறைதவிர்ந் [1]திடுகபா ராண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலைதா ணீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்கென
அறைபறை யென்றன னரசர் கோமகன்.

ஏழாண்டு இறை தவிர்தல் ஒருமரபு : 'ஏழாண்டு தேயத் திட்டும், இறை விடுமின்' (திருவிளை. தடா. 28.) நிதிச்சாலை - பண்டாரம். பறை அறை என்றது வள்ளுவனை நோக்கி மொழிந்தது ; 305. தாள் - தாழ்ப்பாள். ஒப்பு : 302 - 4 ; பெருங். இ. 6 : 48 -59 ; சீவக : 306-8 ; திருவிளை. தடா-28-31.

(பி - ம்.) [1] 'திடுக பார் யாண்டொ ரேழொடேழ், நிறைநிதிச் சாலை', 'திடுகபார் யாண்டொ ரேழினின் நிறைதரு சாலைதா ணீக்கி' (௧௦௯)

303. படையொழிந் திடுகதம் பதிக ளோயினி
விடைபெறு குகமுது வேந்தர் வேதியர்
நடையுறு நியமமு நவையின் றுகுக
[1] புடைகெழு விழாவொடு பொலிய வெங்கணும்.

பெறுகுக ; கு : சாரியை.

(பி - ம்.) 1 'கடவுளர் விழவொடு களிப்ப' (௧௧௦)

304. ஆலையம் புதுக்குக வந்த ளூளர்தம்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்கச் சந்தியும்
[1]காலையு மருள்புரி கடவு ளோர்க்கணி
மாலையுந் தூபமும் வழங்க வென்றனன்.

சாலை - அக்கிரகாரம்; யாகசாலையுமாம். சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடுமிடம்; 'சதுக்கமும் சந்தியும்' (முருகு. 225.) சந்தி - காலையும் மாலையும். காலை - மத்தியானம்.

(பி - ம்.) [1]'காலையு மாலையுங்' (கககக)

## நகர மாந்தரின் மகிழ்ச்சி

305. என்புழி வள்ளுவர் யானை மீமிசை
[1]நன்பறை யறைதர நகரமாந்தரும்
மின்பிறழ் நுசுப்பினூர் தாமும் விம்மலால்
இன்பமென் [2]றளக்கரு மளக்க ரெய்தினூர்.

இன்பமென்றளக்கரும்: அகரம் தொகுத்தல். அளத்தற்கு அரியகடல். அளக்கரு மளக்கர்: மடக்கு.

(பி - ம்.) [1]'வன்பறை' [2]'றளப்பருமளக்க' (ககஉ)

306. ஆர்த்தனர் முறைமுறை யன்பி னூடல்
போர்த்தன புளகம்வேர் [1]பொழிந்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி னூர்க்கெலாம்
தீர்த்தனென் [2]றறிந்ததோ வவர்தஞ் சிந்தையே.

வேர் - வியர்வை. தீர்த்தன் - திருமால், இராமபிரான்; 'தீர்த்தன தருளை நோக்கிச் செய்ததோ' (சு. 4 : 143.)

(பி - ம்.) [1]'பொடித்த' [2]'றறிந்தவர்க் கவர்தம் சிந்தைகள்' (ககங)

307. பண்ணையு மாயமுந் திரளும் பாங்கரும்
கண்ணகன் றிருநகர் களிப்புக் கைமிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமும்
சுண்ணமுந் தூவினூர் வீதி தோறுமே.

பண்ணை - ஆடவர் கூட்டம். ஆயம் - மடவார் கூட்டம். திரள் - தோழிமார் கூட்டம். பாங்கர் - வேறு இடங்களிலும். இழுது - நெய், வெண்ணெய். மு. (திவ்.) 'கண்ணன் கேசவன்.' (ககச)

வேறு

## வசிட்டர் நாமகரணஞ் செய்தல்

308. *இத்தகை மாநக ரீரறு நாளும்*
*சித்த முறுங்களி யோடு சிறந்தே*
*தத்தமை யொன்று [1]முணர்ந்திலர் தாவின்*
*மெய்த்தவ ஞமம் விதிப்ப [2]மதிப்பான்.*

*இராமன் பிறந்தபின் பன்னிரண்டு நாள் திருவிழா : " பத்து நாளுங் கடந்த விரண்டா நாள் "* (பெரிய. 1 : 1 : 8.)

(பி - ம்.) [1] '*முணர்ந்திலதாவா*' [2] '*மதித்தான்*' (கக௫)

309. *கராமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே*
*அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்*
*விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே*
*இராம னெனப்பெய ரீந்தன னன்றே.*

*கராம் - முதலை. எய்த்து - இளைத்து. மெய்ப்பொருள் - யானை ஆதி மூலமே என்றது தம்மையே என்றெண்ணி வந்ததை நினைத்துத் திருமாலை மெய்ப்பொருள் என்றார்.* (கக௬)

310. *கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப*
*விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட*
*வரத னுனித்திட மற்றைய வொளியைப்*
*பரத னெனப்பெயர் பன்னின னன்றே.*

*கரதல முற்றொளிர் நெல்லிகடுப்ப : 'கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்'* (கி. 5 : 25.) [*நுனித்திடம் - வேத நுனியிற்றிடமாகிய ; நுனித்த இடம் நுனித்திட மென நின்றதுமாம். மற்றைய ஒளியை - மிஞ்சிய ஒளியை.*] *வரதன் பரதனெனப் பெயரிட்டான். வரதன் - வசிட்டன். இங்கே பரதனை ஒளி என்றமைக்கேற்ப இராமபிரானை,* 295 - *ஆம் செய்யுளிலும் இலக்குவனையும் சத்ருக்கனனையும் முறையே* 311-2 - *ஆம் செய்யுட்களிலும் கம்பர் ஒளி என்பார்.* (கக௭)

311. *உலக்குநர் வஞ்சக [1]ரும்ப ருயர்ந்தார்*
*நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த*

*விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்*
*இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.*

உலக்குநர் - அழிபவர். நிலக்கொடி - பூமி தேவி.

(பி-ம்.) [1] 'ரும்பருமுய்ந்தார்' (கக௲)

312. *முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்*
*ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்*
*எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணிச்*
*சத்துருக் கன்னெனச் சாற்றின னுமம்.*

சத்துருக்கனன் நிறம் வெள்ளை ; 746. பாஞ்சசன்னியத்தின் அமிசமா தல் பற்றி வெள்ளை நிறம். [முத்தானது ஒரு வடி வெடுத்து அநேகஞ் செந் தாமரை பூத்தாற்போலும் அழகையுடைய ஒளியை.] திருக்கு - மாறுபாடு. (கக௯)

### மன்னன் தானம் அளித்த சிறப்பு

313. *பொய்வழி யின்முனி புகறரு மறையால்*
*இவ்வழி பெயர்க ளிசைத்துழி யிறைவன்*
*கைவழி [1]நிதிபொழி நதிகலை மறையோர்*
*மெய்வழி யுவரி [2]நிறைந்தன மேன்மேல்.*

மறையோர் மெய்வழி யுவரி - மறையோர் அறிவாகிய கடல்; மெய் - அறிவு; புறநா. உரு : 11, உரை, தசரதன் தானம் : 184.

(பி-ம்.) [1] 'நிதி யெனுநதி' [3] 'நிறைத்தனன் மென்மேல்' (கஉ0)

### தசரதன் ஸ்ரீராமரை உயிரேன மதித்தல்

314. *காவியு மொளிதரு கமலமு மெனவே*
*ஓவிய வெழிலுடை யொருவனை யலதோர்*
*ஆவியு முடலமு மிலதென வருளின்*
*மேவின னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.*

காவி - நீலோத்பலம். ஓவிய எழிலுடை ஒருவன் : 'ஓவியஞ் சுவை கெடப் பொலிவதோ ருரு' (1139) ; 'ஓவியத் தெழுதவொண்ணு உருவத் தாய்' (சு. 5 : 78.) இராமபிரான் தசரதருக்கு உயிர் : 337, 347, 1139 ; உ. 3 : 20, 32 ; 5 : 60 ; இராமன் தசரதருக்கு வெளியில் உலாவும் பிராணன் என்பர் வான்மீகி. (கஉக)

### மக்கள் நால்வரும் வளர்தல்

315. அமிர்துகு குதலையொ டணிநடை பயிலாத்
திமிரம தறவரு தினகர னெனவும்
தமரம [1]துடன்வரு சதுமறை யெனவும்
குமரர்க ணிலமகள் குறைவற வளர்நாள்.

அமிர்து உகு குதலை. திமிரம் - இருள். திமிரமது; அது: பகுதிப் பொருள் விகுதி. தினகரன் அரசர்க்கு உவமை: புறநா. ச: 15 - 6; அ. மு; பெரிய. மனுநீதி, 19. தமரம் - ஓசை. நால்வர்க்கும் நாலு வேதம் உவமை: 747, 1145, 'மறை நான்குருவெடுத்தென்ன' (பாகவத. 523.)

(பி - ம்.) [1] 'துடன் வளர்' (கஉஉ)

### கலைகளைப் பயிலல்

316. சவுளமொ [1]டுபநய னமுமுறை தருகுற்
றிவளவ தெனவொரு [2]குறைபிறி திலவாய்
[3]உவளரு மறையினொ டொழிவறு கலையும்
தவண்மதி புனையர னிகர்முனி தரவே.

தருகுற்று - செய்வித்து. இ அளவது என - இந்த அளவின தென்று. உவள் - நடுக்கம். தவள் = தவளம் - வெண்மை.

(பி - ம்.) [1] 'டுபநயம் விதிமுறை' [2] 'கரை பிறி' [3] 'உவடறு' (கஉங)

317. ஆனையு மிரதமு மிவுளியு முதலா
ஏனைய பிறவுமவ் வியல்பினி [1]னடைகற்
றானுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடு வளர.

இவுளி - குதிரை. கிளை - சகோதரர்.

(பி - ம்.) [1] 'னடையுற்' (கஉச)

### மக்களைப்பற்றி முனிவராதியோரின் நம்பிக்கை

318. அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவுமிந் நகருறை செனமுநம் மிடரோ
டிருவினை துணிதரு [1]மிவர்களி னிவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார்.

சனமும் என்பது மோனை நோக்கிச் செனமும் என்று வந்தது. உறை- உறைதல்.

(பி - ம்.) 1 'பிவரிணி திவணின்' (௬உ௫)

### இராமரும் இலக்குவனும் பிரியாமல் பழகுதல்

319. ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதர [1]வனமும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்.

ஐயனும் இளவலும் - இராமலட்சுமணர்கள். நெய் குழலுறும் இழை யென - நெய்யும் குழலுடனே பொருந்தி, விடாது திரியும் நூலிழை போல; 'பாவிடை யாடு குழற்போற் கரந்து' (திருவா. அடைக்கலப். 8); 'பாவிடு குழலி ஞயிடைத் திரிதர' (பெருங். ௪. 4 : 39); 'பாவிற் குழல்போல, நின்றுழலுங் கொள்கைத்தே நெஞ்சு' (நள. 77).

(பி - ம்.) 1 'நதியும்' (௬உ௬)

### பரதனும் சத்துருக்கனனும் சேர்ந்தொழுகுதல்

320. பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

பரதனும் இளவலும் : உ. 2 : 57. எனையாள் வரதன் : 218, குறிப். பகிராது - பிரியாமல். (௬உ௭)

### பல்லோரின் மகிழ்ச்சியும் வாழ்த்தும்

321. வீரனு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ [1]டுரைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு [2]தணிதரு துறைநக ரெதிராக்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

வீரன் - இராமபிரான்; மகா வீரனென்று வழங்கப்படுவார்.

(பி - ம்.) 1 'டுறைதரு' 2 'தணிநகர் துறுகுவ ரெதிர்வார்' (௬உ௮)

322. ஏழைய ரனைவரு மிவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளு மிளையார்
வாழிய ரெனவவர் மன்றுறு கடவுட்
டாழ்குவர் கௌசலை தசரத னெனவே.

ஏழையர் - பெண்கள். இவர்தடமுலை தோய் மதுகையர் என்றது அம் மாதர்களின் கணவர்களை. கேழ் - உவகை. மதுகை - வெற்றி. இளையார் - இளையவர்களாகிய இந்நான்கு மக்களும். அந்நகரத்திலுள்ள ஆணும் பெண்ணும் தசரதனையும் கோசலையையும் ஒத்தனர்; உ. 3 : 66.

(பி - ம்.) [1] 'மன்னுறு கடவுட்' (கஉக)

இராமருக்கும் இலக்குவனுக்கும் முகிலும் வடவரையும்

323. கடறரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மென [1]நிகர் புகல்வார்.

கமலம் பூத்த முகில் இராமபிரானுக்கு: 205, குறிப். பொன்னிற மாதல்பற்றி வடவரை இலக்குவனுக்கு உவமை. இராமருக்குக் கமலம் பூத்த கடலும் இலக்குவனுக்கு வடவரையும்: 'மார்க்கடஞ் சூழ்ந்த வைப்பி னிளையவன் மருங்கு காப்ப, நாற்கட லுடுத்த பாரி னாயகன் புதல்வ னமப், பாற்கடல் சுற்றவிற்கை வடவரை பாங்கு நிற்பக், கார்க்கடல் கமலம் பூத்த தெனப்பொலி வானைக் கண்டான்' (சு. 4 : 132); 'வில்லேந்து மெனிற்செம்பொற் பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார் கள், இருவரையு மிருவர்க்கங் கிளையாளு மீன்றெடுத்தாள்' (746.)

(பி - ம்.) [1] 'நனி புகல்வார்' (கஙo)

இராமரின் நலம் உசாவும் இயல்பு

324. எதிர்வரு மவர்களை யெனையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிர
எதுவினை யிடரிலை யினிதுநு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே.

எனையுடையிறைவன்: 218, குறிப்பு. எதுவினை - என்னால் உமக்கு வேண்டிய வினையாது? உம்தொழில் யாது என்றலுமாம். இடரிலை என்றதன் பின் கொல்லென்பதனைக் கூட்டுக. ஒருவரைச் சந்தித்து அவர் பேசுவதற்கு

முன் குசலம் விசாரிக்கின்றவர் பூர்வபாக்ஷி எனப் பெறுவர்; வான்மீகி இராமபிரானை இங்ஙனங் கூறுவர்; பால. சர்க்கம் 18. (கஉக)

## உசாவப்பட்டவரின் மறுமொழி

325. *அஃதையஃ தினையெம தரசென வுடையேம்*
*இஃதொரு பொருளல வெமதுயி ருடனேம்*
*மகிதல முழுதையு முறுகவி மலரோ*
*னுகுபக லளவென வுரைநனி [1]பகர்வார்.*

அஃது - அப்படியே; சீவக. 1884, 2344. இமலரோன் - இம்மலரோன்; மலரோன் உகுபகல் அளவு - பிரம கற்பம் வருமளவும்.

(பி - ம்.) 1 ' புரிவார் ' (கஉஉ)

வேறு

## தசரதனது பெருமகிழ்ச்சி

326. *இப்பரி சணிநக ருறையும் யாவரும்*
*மெய்ப்புகழ் புனைதர விளைய வீரரும்*
*தப்பற வடிமலர் தழுவி யேத்துற*
*[1]முப்பரம் பொருளினு முதல்வன் வைகுறும்.*

முப்பரம் பொருளினு முதல்வன் - திரிமூர்த்திகளுள் முதல்வனாகிய இராமன்: 1317.

(பி - ம்.) 1 ' முப்பரம் பொருளுக்கு முதல்வன் ' (கஉங)

327. *அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்*
*விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்*
*முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்*
*கரைசெய லரியதோர் களிப்பின் வைகுநாள்.*

பெருமகன் - அரசன், தசரதன்; சீவக. 183. அகிலம் யாவையும் விரசுறு தனிக்குடை : 190. கரை - சொல்; ' அறங் கரை நாவின் ' (தொல். பாயிரம்.) கரை செயல் - சொல்லுதல், வரம்புகட்டுதல்; 336, 1207, 1268. கரைசெய லரியதோர் களிப்பு : 1393. (கஉச)

திருவவதாரப் படலம் முற்றும்.

## செய்யுள் முதற்குறிப் பகராதி

[பக்கம் குறிக்காத இடங்களில் எண்—பாட்டின் எண்]

# அரும்பதமுதலியவற்றின் அகராதி

[எண் - பாட்டின் எண்]

---

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 27 | 31 | சொல்லப்பட்ட | நெற்றியிலுள்ள |
| 29 | 28 | தோன்றுவெழுவாய் | எழுவாய் |
| 45 | 7 | 38 | 83 |
| 45 | 16 | செல்வழி | செவ்வழி |
| 46 | 7 | ணிருசுற் | ணிருஅற் |
| 48 | 18 | வயல் விழி | வயில் விழி |
| 55 | 20 | வாதென | யாதென |
| 73 | 6, 8 | விசிக்கருவி | விசிகருவி |
| 73 | 26 | வனப்ப | வனப்பு |
| 74 | 17 | தாளொத்ததுவே | தாள் வைத்ததுவே |
| 74 | 30 | பொருந் அல்லன | அல்லன |
| 80 | 10 | தழையுந் | மழையுந் |
| 86 | 12 | க 757 | 757 |
| 108 | 10 | முன்னினன் | முன்னினர் |